உ

கடவுள் துணை.

# சர்வசமய சமரசக் கீர்த்தனைகள்.

இவை

மாயூரம் மாஜிமுன்சிப்

## ச. வேதநாயகம்பிள்ளை

அவர்களாலியற்றிய கீர்த்தனைகள்

முழுமையும் பதிப்பியாம லிருந்ததையும்

சில அச்சுக்கூடத்தாரால் பதிப்பித்ததையும்

அருட்கவி கி. ஊ. பா.

**கங்காதரநாவலரவர்களால்**

பரிசோதிக்கவுற்ற

பிரதிக்கிணங்க:



இஃது

சென்னை-இட்டா

**பார்த்தசாரதிநாயுடு**

அவர்களாற்றமது

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

நெ. 84. ஆசாரப்பன்தெரு சென்னை.

உ

கடவுள் துணை.

சர்வசமயசமரசக்கீர்த்தனைகளின்

# அகராதி.

# கீர்த்தனைகளின் அகராதி.





கடவுள் துணை.

# சர்வசமய சமரச ஸ்தோத்திரம்.

## பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்கொண் டிலங்கிடும் சிருட்டிதிதி சம்மாரஞ்
  செய்ய முக்குண வஸ்துவாய்
செப்பரிய சகுணமாய் நிர்க்குண நிராகார
  நீண்டிடா ஞானவொளியாய்
பார்கொண் டிலங்கிடும் யாவையுந் தந்தாளும்
  பரனாய் பரஞ்சுடருமாய்
பக்தரி னுளத்தினி லாடுந்தெய்வீகனாய்
  பாவமெனுந் திமிரமோட
பேர்கொண் டிலங்கிடும் தாரகம தாய்வேதம்
  பேசரிய கலையாகியோ
பெட்புறை யானந்த முச்சுடரு மாய்நின்ற
  பெருமை நிறை யாவும் வல்ல
வார்கொண்டி ழங்கிடும் தாதாவுமாகிய
  வள்ளலே கருணைதரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் நிந்தையகல
  மாசிலா ஜகதீசனே. (1)

எங்கும் நிராதார நிர்க்குண நிராலம்ப
  ஏகாந்த காருண்ணிய
மென்றுந் துலங்கிட மனோதீத மதினினைந்
  தெழிலாகும் பரமகுருவாய்
துங்கமெனு மெய்ஞ்ஞான தீபமாயடியவர்
  துகளனைத்துந் தீர்த்தரு
ளுய்யசை தங்யசர்ய் திருமறைக ளோதிதொழும்
  சுத்தசின் மயவடிவமாய்
புங்கவர்க ளென்றுந்துதி செய்திடுங்காரணப்
  பூரணப் பொருளுமாகி
போதங்க ளியாவுக்கு முதன்மையாய் நின்றொழுகும்
  புண்ணியவாழ் வதனை [illegible]ன்றும்
மங்களாகாரமாக வருள் [illegible]னாதிதனே
  வள்ளலே கருணைதரவே

வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் சிந்தையகல
மாசிலா ஜகதீசனே. (2)

பூதலமெலாம்பரவு நாத நாதாந்தனே
பொற்பிலகு மானந்தனே
புகழ்தங்குஞ் ஞானகா ருண்ணியனே தொண்டரின்
புரையனைத்தையுந் தீர்த்திடும்
வேதனே வேதாந்த சமரசக் கியானியர்கள்
விரும்பியே துதிபராவும்
விமலனே அமலனே வித்தக நிராலம்ப
விபுதனே சுகுணமலியும்
போதனே பூசுரர்க ளுளமதனி லேநீடும்
பூரணா னந்தவாழ்வே
போக்குவர வில்லாத புண்ய கருணாம்பரா
பொய்யிலா துண்மை வடிவே
வாதனையு மும்மலச் சேட்டையு மொழித்திட
வள்ளலே கருணாகரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் சிந்தையகல
மாசிலா ஜகதீசனே. (3)

அண்டர்கள் பணிசெய்யு மாதிமத்யாந்தகா
அற்புதா காசிலனே
அவனியுட னதிலுள தியாவையு மமைத்தருளும்
ஆனந்த மறைமூலனே
பண்டைவினை யாவையும் தீர்த்தாண்டு கருணைதரும்
பரனே நிரந்த்ரவடிவே
பகாரிய சுகுணமே பதமருளும் நம்பனே
பக்ஷமது வைத்தருள் செய்வாய்
எண்டிசையும் துதிமலியும்ஏகவைபோகனே
எதிலார்க்கருள் தியாகனே
எப்பாருமுன்தளியி லாமல்திசமூர்த்தனவே
என்னுளம் நினைந்துருகலால்
மண்டல மெலாம்புகழ சமரசக்கீர்த்தனே
வழுத்தினேன் கருணாகரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் சிந்தையகல
மாசிலா ஜகதீசனே. (4)



உ

கடவுள் துணை.

# சர்வசமய சமரசக் கீர்த்தனைகள்.

* 

## 1. இராகம்-தேவகாந்தாரி-ஆதிதாளம்.

பல்லவி.

எக்காலமும் உந்தன் பொற்கால்பணிந்துகொண்
டிருக்கநீவரம் அருள்வாய். (எக்கா)

அநுபல்லவி.

தக்கோர் அபிமான ஞானசீலா
சகலபுவனரக்ஷ கானுகூலா. (எக்கா)

சரணங்கள்.

1. சந்தமேவுபிர பந்தமாலைபாடி
கந்தமார்உன் அர விந்தபாதம்சூடி
வந்தனாதிகள் அநந்தமேசொலி
விழுந்துபூமியில் எழுந்துனைந்துருகி. (எக்கா)

2. துங்கசாதுஜன சங்கமோடுகூடி
பொங்கும்ஞான அகலங்கவாரிஆடி
அங்கமேபரவ சங்கொளப்பலப
தங்களோடுசுப மங்களங்கள்சொலி. (எக்கா)

3. பழுதிலாதுதினம் முழுதும்உன்னைநாடி
தொழுதுநேசமுடன் அழுதுபாடிஆடி
ஒழுகுசெந்தழலின் மெழுகுபோலமனம்
இளகியேஅதிக புளகிதாங்கமுடன். (எக்கா)

4. பூதலம்பரவு பாதவேதநாதா
சாதகம்செயும் அபேதகீததாதா
போதநாயகனே பூதநாயகனே
கீதநாயகனே வேதநாயகனே. (எக்கா)

---

2. இராகம்—துசாவந்தி—ஆதிதாளம்.

பல்லவி.

ஓடிநான்உன்னைத் தேடிவந்தேன்-எனக்
குதவிசெய்தருள்-ஐயனே.

அநுபல்லவி.

நாடிஉன்பதம் தொட்டேன்
கோடிதரம் கும்பிட்டேன்
நாதவிநோத பிரசாதபிரபோல
அபேதஅதீத நிர்வாதஙியாதனே. (ஓடி)

சரணங்கள்.

1. அற்பமானபதார்த்தம்—சற்றும்விரும்பேன்
ஐயா இதுயதார்த்தம்
அற்புதபரமார்த்தம்-கொடுத்தருளில்
அதுவேஉப யோகார்த்தம்
பற்பல விசித்திரனே
கற்பனா சமுத்திரனே
பாச விநாச கரேச நரேச
பிரகாச விகாச உலாச விலாசனே. (ஓடி)

2. வந்துனையே அடுத்தேன்-கீர்த்தனமாலை
வகைவகை நான்தொடுத்தேன்
வந்தனம்கைஎடுத்தேன்—நீவசிக்கஎன்
மனக்கோயிலுங் கொடுத்தேன்
அந்தமனை உனக்கே
உன்தன் மனைஎனக்கே
ஆய விதேயர்கள் நேயசகாய
அகாய உபாய நியாயவிதாபனே. (ஓடி)

3. அன்பர்உபாசனனே-பூதலந்தன்னில்
அதர்ம விமோசனனே
இன்பநிவேசனனே-வேதநாயசன்
இதயசிம்மாசனனே
என்பவங்களைத் தீர்ப்பாய்
உன்பதந் தன்னிற்சேர்ப்பாய்
ஏக அநேக திரிலோகநிர்வாக
தெய்விக விவேகஅமோக தியாகனே (ஓடி)

3. இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

எனை ஆதரிப்பாயே-என் மன இருள்
தனையேபிரிப்பாயே, (எனை)

அநுபல்லவி.

வினையே அரிக்கும்சொல்லா
வீணனுன் ஒருபுல்லா
நினையா என்மனம்கல்லா
நிலம் அதனுடன்மல்லா
நிசயபிர போதனே
அக்ஷயப் பிரக்கியாதனே
சஜ்ஜனப் பிரசாதனே
துர்ஜ்ஜனப் பிரமாதனே. (எனை)

சரணங்கள்.

1. துக்கப்பிர பஞ்சத்தொல்லை
சொல்வதற் குண்டோஎல்லை
திக்குவே றெனக்கில்லை
தெய்வமேகேள் என்சொல்லை
சிஷ்டர் சமுதாயனே
துஷ்டர்கள் அபாயனே
இஷ்டர்கள் சகாயனே
அஷ்டகுண நேயனே. (எனை)

2. அடியனுன் வினைவசம்
ஆயினன் இதுநிசம்
படியிற் கருணைசாம்
பாலித் தருள்கலசம்
பக்தஜன நேசனே
சுத்தமன வாசனே
சித்தமல நாசனே
வித்தக விலாசனே. (எனை)

3. மருவிய பாசவலை
மாட்டி உற்றேன்கவலை
தருமசைதன் னியநிலை
தந்தென் மயக்கந்தொலை

சங்கடநிவாரகா
எங்கள்குல தாரகா
பொங்குசுக தாயகா
அங்கவேத நாயகா. (என்ன)



4. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

சுத்தம்உவந்தருள்செய்ய-இத்தனை தாமதமேது
சீலனேபுவனபரி பாலனேமீலனேநீயுன் (சித்தம்)

அநுபல்லவி.

நித்தனேபுவியெங்கும் பிரசித்தனே சுத்தனேநிகிலலோக
கத்தனேஜீவகோடிகட் கத்தனே சுத்தனேநீயுன். (சித்தம்)

சரணங்கள்.

1. அசடனுனென்பதென்ன ரகசியமா-பெற்ற
அன்னையிடம்உண்மை சொல்லவேபயமா
வசஞ்செய்தருள்வ துனக்கோர்விஷயமா-யாவும்
வல்லஉனக்கிதென்ன அதிசயமா
வசனசாதுரியனே
மன்னமாதுரியனே
சுஜனர்கள்பிரியனே
சுரர்தொழும்பெரியனே. (சித்தம்)

2. நிதமும்உனதுபத கைங்கரியமேசெய்ய
நீயருளெனக்குச் சுதந்திரியமே
அதுவேயெனக்குப்பெரும் சௌகரியமே இனி
ஐயனேவேண்டேன்வேறு ஐசுவரியமே
அதிசய அப்பிரமேயா
அகணித சுப்பிரகாயா
விதிநெறி செப்பும்வாயா
விநய சங்கற்பதூயா. (சித்தம்)

3. பூதபௌதிகமெல்லாம் நிறைவோனே நல்ல
புண்ணியத்திருமறையை அறைவோனே
வேதநாயகன்மனம் உறைவோனே ஞான
விழியில்லாதவருக்கு மறைவோனே

போதகப்பிரகாசனே
புண்ணியப் பிரதேசனே
சாதக்கிரு பேசனே
தாசருட் பிரவேசனே. சித்தம்

———(*)———

5. இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னிடத்திற்சொல்லாமல் யாரிடத்திற்சொல்லுவேன்.

ஓ-ஓ-ஜகதீசா.

அநுபல்லவி.

பொன்னிடத்தாசையறு புனிதர்கள்தமக்கின்பம்
பொழிதருவே இந்தப் புவியில்நான்படுந்துன்பம். உன்னி

சரணங்கள்.

1. வயிறுபசிக்கும்பிள்ளை மாதா இடம்போமன்றி
மற்றொருவரிடத்திற் சேருமோ—நாளும்
அயர்வுறும்பெரும்பிணி அருமருந்தாலன்றி
அயலொன்றினாலே அதுதீருமோ-கன.
வெயிலால் வருந்துவோரே
வேண்டுவர் நிழல்நீரே
உயிர்ப்பயி ரோம்புங்காரே
உனையன்றிக் கதியாரே.
உலைவுறுசல்லடை போற்பலஓட்டை
உளதாகியவெறும் புழுமலக்கூட்டை
நிலையெனமனக்கவி செயும்பலசேட்டை
நித்தியம்நான் அதனாற்படும்பாட்டை. உன்னி

2. நாதனேநான்பிழை யாதுசெய்யினும்நின்னை
நம்பினேன் என்மேனின்னம் க்ஷாத்திரமா-பாரில்
ஓதரும்புலச்சத்து ராதியர்கையில் என்னை
ஒப்புவிக்குதல்தர்ம சாஸ்திரமா-மறு
மாதர்மேற் செல்லும்நேத்திரம்
வாயே அபத்த பாத்திரம்
தீதுரைகொள்ளுஞ் சுரோத்திரம்
சிற்றின்பம் வேண்டுங்காத்திரம்.

தீய அவயவங்கள் செயுந்தினமோசம்
சிந்தையிற்குடிகொண்ட தாசாபாசம்
நாயேன்செய்கைகளே ஆபாசம்
நான்குபக்கத்திலும் காண்படுங்கிலேசம். உன்னி

3. எத்தனைசுமைபாவம் வேண்டுமோனாலுமுந்தி
எனக்குக்கொடுக்கலாம் அச்சாரமேஎன்தன்
அத்தனே நாளுன்சேயென்றறிந்துநோய்செய்யுமாயைக்
கார்தந்தார் இந்த அதிகாரமே-சர்வ.

உத்தமஞ்சேர்ஸிர்தோஷ
உன்னதமாவிசேஷ
பத்தர்நித்தியசந்தோஷ
பரசமயத்துவேஷ.

பாக்கியமலர்த்தருள் பழுக்கும் உத்தியான
பலபுவனத்மகோடிகள் அபிமான
ஆக்கியவேத நாயகன்ஸ்வாதீன
அன்னைதந்தைகுருதெய்வஞ் சகலமுமான. உன்னி

——(*)——

6. இராகம்-பூரணகௌளை-ஏகதாளம்.

பல்லவி.

என்பிழைகள் பொறுத்தருள்வாய்—எனை அலைக்கும்
துன்பவினை அறுத்தருள்வாய்.

அநுபல்லவி.

முன்பரவியே ஜெபிக்கும்
அன்பர்கள் அனுபவிக்கும்
இன்பமே அவர்விரும்பும்
நின்பதகமலம் நம்பும். (என்)

சரணங்கள்.

1. நேயனைப்போல்விவகரிப்பேன்-துதிகவிகள்
ஆயிரம் உண்டாக்கிவிரிப்பேன்-என்செய்கையெல்லாம்
வாயின் அன்பலாதுமனம்-தோயும் அன்புளதோசிறு
நாயின் அன்புமேயிலாயல்-தீயவம்பனுய்த்திரியும். என்

2. எண்ணவொண்ணுமோ என்பவமே-ஐயனே இந்த
மண்ணினில் என்ஜன்மம் அவமே தினந்தினமும்
உண்ணலுபரித்திரைதனை-நண்ணலுர்பெரும்பவங்கள்
பண்ணலும் அல்லாதுன்பதம் எண்ணல்செய்தறியேன்ஸ்வாமி.

3. போதகம் என்னிடம்லயமே-என்மனம்பஞ்ச
பாதகங்கட்காலயமே-புவனமிசை
மாதவம்புரிபவர்க்கு—கோதலும் இகபர
சாதகங்கொடுத்தருளும்-வேதநாயகா இறங்கி. (என்)

---

7. இராகம்-சுப்பிரதீபம்-திரிபுடை.

பல்லவி.

வினையே எனையே மேவாதருளே

அநுபல்லவி.

நினையேநம்பினேன் சின்மயப்பொருளே (வினை)

சரணங்கள்.

1. கனவிலுந்தருமத்தைக் கண்டறியேனே
அனவரதமும்உன தருள்குறியேனே
2. பாவமென்பதற்கொரு பதியானேனே
ஜீவனும்வழிதெரி யாமற்போனேனே. (வினை)
3. உதரபோஷணையன்றி உணர்கிலேனே
இதயந்தன்னில் உன்னடி இணைபுனையேனே. (வினை)
4. பூதலந்தொழும அதி புண்ணியர்மித்திரனே
வேதநாயகன்தொழும் விமலபத்திரனே. (வினை)

---

8. இராகம்-பரசு-ரூபகம்.

பல்லவி.

ஆண்டருளே-கருணை-பூண்டருளே.

அநுபல்லவி.

தூண்டருஞ் சுடராக விளங்கும்
சோதியே-உயர்-நீதியே எனை (ஆண்ட்)

சரணங்கள்.

1. என்னை ஆள்வது பாரமா என
திடம்வர வெகு தூரமா
அன்னைக்கும் ஒப சாரமா எனக்
கருள் புரிய இந் நேரமா கன

ஆரியனே மெஞ்ஞான
சூரியனே சர்வலோக
காரியனே - மிகுந்தஒள
தாரியனே - ஜகந்தனில்

உன்னையல்லாது பின்னையார் துணை
யோகனே-சுக-போகனே-என. (ஆண்ட)

2. எனதுடலெனும் புல்லையே காக்க
எவர்க்குங் காட்டுவன் பல்லையே
தினமும் ஆயிரத் தொல்லையே இதில்
சிறிது மேசுகம் இல்லையே கன

சேதனனே - பெரியபு
ராதனனே - பாவநி
கேதனனே - மெஞ்ஞான
சாதனனே - அநுதினம்

நினது பாதம் நம்பினேன் அதி
நேசனே-பிர-காசனே-என (ஆண்ட)

3. பொறுமை உனக்குச் சொந்தமே நான்
புரியும்பிழை அந்தமே
மறுமையுறு நிர்ப்பந்தமே கன

மாக்ஷியனே - அமரர்கண்
காக்ஷியனே - சர்வாண்ட
சாக்ஷியனே - தனிஅர
சாக்ஷியனே - தினந்தினம்

சிறுவன் வேதநாயகன் பணி
கீர்த்தியே - அற - மூர்த்தியே- எனை. (ஆண்ட)

9. இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

காக்ஷிஎனக்குக் கொடாமலிருக்கின்ற
காரணம் ஏதையா (காக்ஷி)

அநுபல்லவி.

சாக்ஷியாய்நிற்கும் சருவாதிகாரனே
மாக்ஷியுடையோர்மகிழ் நிர்விகாரனே. (காக்ஷி)

சரணங்கள்.

1. அந்தரங்கபக்தி அற்றவனென்றோ
அக்கிரமத்தில்பெயர் பெற்றவனென்றோ
பந்தப்பேய்க்குள்ளத்தை விற்றவனென்றோ
பாதகங்களெல்லாங் கற்றவனென்றோ (காக்ஷி)

2. மறந்தும்ஒருமெய்சொல் லாதவனென்றோ
மருந்துக்கும்நன்மைஇல் லாதவனென்றோ
சிறந்தமெஞ்ஞானங்கல் லாதவனென்றோ
தேசத்தார்க்கெல்லாம்பொல் லாதவனென்றோ

3. ஏசிமறையை இகழ்ந்தவனென்றோ
ஈனமதத்தைப் புகழ்ந்தவனென்றோ
நீசெய்தநன்றி மறந்தவனென்றோ
நீசர்க்குள்மெத்தச் சிறந்தவனென்றோ (காக்ஷி)

4. ஆதிமத்தியாந்த ரஹிதமகேசா
அற்புதசின்மயா னந்தவிலாசா
வேதவேதாந்த விதிஉபதேசா
வேதநாயகன் இதயப்பிரகாசா (காக்ஷி)

---

10. இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

அருள்புரிவாயே-எனதுள
மருள்தெரிவாயே

அநுபல்லவி.

இருளை நிகரும் சுருள் கொள் ஒதியர்
இலகும்பொருள்-உலகபுரி-கலகம்படர்-விலகும்படி. (அருள்)

சரணங்கள்.

1. நினைவெல்லாம் உன்நினைவதாயென் நெஞ்சம்உன்னுதோ-பழி
புனையும்வாய்வெறும்பேச்சைவிட்டுனைப்புகழ்ந்துபன்னுதோ-சிறு
தினையளவு மெய்தனைவிடாது
சிந்தித்துனை-வந்தித்திடு-புந்தித்திடம்-வந்துத்திட. (அருள்)

2. எத்திசையும் உன்னுருவமாகவே இலக்காணேனோ-சொந்த
அத்தம்யாவும்நீயென்றேமிக ஆசைபூணேனோ-கன
பத்தியாயுனை நித்தம்போற்றிப்
பாடித்தினம்-நாடித்தவம்-நீடிக்கதி கூடிக்கொள. (அருள்)

3. நீதமாயரும் போதமாயெங்கும் நிறையுங்கர்த்தாவே-நாளும்
வேதநாயகன்காதல்மனப்பெண்மேவும்பர்த்தாவே-கொண்ட
ஏதமறப்பிர சாதம்உதவி
இழிவண்டிய-பழிவிண்டுநல்-வழிகொண்டுனை-விழிகண்டிட. (அ)

---

11. இராகம்-மணிரங்கு-திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம்இரங்கிநல் மூத்தர்தங்கோஷ்டியிற்
சேர்த்தெனைக் காத்தருளே.

அநுபல்லவி.

உத்தமசீலர்தஞ் சித்தமலர்உறை
வேனே-கோனே-வானே-தேனே. (சித்த)

சரணங்கள்.

1. நின்னடித்தொண்டனென்ன அறியும்
நிதம் உலகந்தானே
என்னஉன்தொண்டின் பலனென்றெனைப்புவி
ஏசில்என் சொல்வேனே
பன்னரும் உன்னருள் என்னருகாக்கிடப்
பண்ணே-கண்ணே-எண்ணே-விண்ணே (சித்த)

2. பொய்த்தெய்வங்களைப் போற்றிப்பெரும்பழி
பூண்டவர்தம்முனமே
மெய்த்தெய்வம்உன்னைத் தொழும்எனக்கென்ன
விசேஷப் பிரயோசனமே
கைத்தொழில்அண்டம்அனைத்துந்தாங்கிடு
கைய்யா-துய்யா-மெய்யா-ஐயா. (சித்த)

3. கழுவக்கழுவ அழுக்குடல்மீது
கலந்தட ருந்தன்மையே
தழுவியென்னெஞ்சுறு மாசுகள்நீங்கிடத்
தந்தருள்வாய்நன்மையே
எழுமன்பொடுவேத நாயகன்போற்றிடும்
ஏகா-யோகா-வாகா-தியாகா. சித்த

---

## 12. இராகம்-தர்பார்-திரிபுடை-தாளம்.

### பல்லவி.

என்னை ஆளையா-என்விண்ணப்பம்
தன்னைக் கேளையா

### அநுபல்லவி.

மின்னைநிகரும்வாழ்வை வெறுப்பவர்க்குரியோனே
அன்னைபிதாசற்குரு வாகியபெரியோனே என்னை

### சரணங்கள்.

1. அடியேன்மேற்சினமா-என்குறைநீக்கி
ஆள்வதுகனமா
கடினம்நின்மனமா-உனதுநெஞ்சங்
கவலைக்காசனமா
படியில் என்கத்துரு பாவ இருளைமாற்றித்
திடமுறவேமெஞ்ஞான தீபமதனையேற்றி. என்னை

2. என்றுஞ்சஞ்சலமா-ஐயனேமாயைக்
கிளவுபலமா
வென்றுகொள்புலமா-அதனால் ஏழை
மெலிவதுநலமா
நன்றுருவாகியநாதா என்முகம்நோக்கிக்
குன்றெனநான்செயுங் கொடுவினைகளைப்போக்கி. என்னை

3. கைவிடலாமா என்னிடம்வரக்
கால்மலர்நோமா
நைவினைபோமா-இனிமைதங்கும்
நன்னயநாமா
தெய்வனாயகனாகித் திகழுறும் அகளங்கா
கைவல்லியஞானநெறிகமழ்மதுரப்பிரசங்கா. என்னை

4. இத்திக்குக்தேனே-அமுதகன
தேவர்கள்கோனே
எத்திக்குந்தானே-எள்ளுமெண்ணெய்போற்
இருக்குங்கோமானே
புத்தியுடையோர்சூட்டும் புகழ்மாலை அணிவோனே
பத்தியுடனே வேத நாயகன்பணிவோனே. என்னை.

---

### 13. இராகம்-கல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

தருணங்கருணை புரிகுவாய்-ஐயா- உனக்கனந்தங்கோடி
சரணஞ்சரணந்-தெரிகுவாய்மெய்யா.

அநுபல்லவி.

அருணகோடி தேஜோமயனே பொன்
திரணமென்றுன்னுவோர்பயனே இத். தருணங்

சரணங்கள்.

1. இந்திரியசத்துருக்கள் செய்மோசம்
என்னசெய்வேனிர்வகித்தல் பிரயாசம்
நிந்தனையான அநு பந்தபாசம்
நீங்கச்செய்வாய்புண்ணிய உபதேசம்
நீயேகல்லென்றே ஒரு
தாயேதுயரென்றே சிறு
நாயேன்கெடல்நன்றே கன
தீயென்உடல்குன்றே இது தருணங்

2. கோரமாய்த்தன்பிள்ளை செய்யினுந் தீது
கோபித்துநீக்கிடுந்தாயுண்டோ ஓது
காரமாநான்செயும்பாவம்பொ றுது
கைவிடில்வேறெனக்காதர வேது
காயத்தைஎடுத்தேன் அரு
மாயத்தை அடுத்தேன் அனி
யாயத்தைவிடுத்தேன் திரு
நேயத்தைவிடுத்தேன் இது தருணங்

3. ச்சுமரத்தையும்வைத்தவன் தானே
நாள்தோறுங்காவல்செய்யாமல்இ ரானே
இச்சகமீதில்எனை அமைத் தோனே
என்னைநீ ஆளாவிடிற்பிழை யேனே

ஏகந்தனையுருவே சுக
போகந்தனைதருவே சுக
யோகந்தனைதிருவே முதிற்
பாகந்தனைகுருவே இது தருணம்

4. நிதமும்நானும்பாதகச் சேறு
நீக்கிடப்போதுமோநின்னருள் ஆறு
விதியுங்கதியும்இல்லையே வேறு
வேதநாயகனே அருள் பேறு
வேதத்துருவோனே பல
பூதப்பெருமானே சுக
போதத்தமர்கோனே இரு
பாதத்தைவிட்டேனே இது தருணம்

—(*)—

14. இராகம்—தேசிகதோடி—ஆதிதாளம்.

பல்லவி.

ஐயாஎனை ஆண்டருளே-உனை
அண்டினனே-மனம்-வேண்டினனே. ஐயா

அநுபல்லவி.

பொய்யாவாழ்வினில்நான் குழையாமல்
போகாதிகளில்என்மனம் நுழையாமல் ஐயா

சரணங்கள்.

1. ஒருநிமிஷமுமுனதடிமறவாமல்
உடல்கழியினுமுனதருள் துறவாமல்
இருநயமதனிலோரிடர்பிறவாமல்
இழிவுறுபழியொடுகோணிறவாமல். ஐயா

2. உன்னையலாதொருவரையுந்தொழாமல்
உதரமிதற்கெங்கும் ஓடியழாமல்
இந்நிலமீதுதுராசைஎழாமல்
இறந்தபின்னெரிநரகில்விழாமல். ஐயா

3. நல்வழிதன்னையெந்நாளும்விடாமல்
நாட்டில்அசடனெனநான் பேரெடாமல்
பல்வகையாகியபழிகள்தொடாமல்
பாவையர்மோகத்தில் படிந்துகெடாமல். ஐயா

4. என்னுயிர்போல எவ்வுயிரையும்பேண
இகசுகபோகத்தை என்றுமேநாண
மின்னுங்குணுபர ணந்தனைப்பூண
வேதநாயகனே நானுனைக்காண. ஐயா

---

15. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய்-ஸ்வாமி—இந்த.

அநுபல்லவி.

பந்தவினையெலாம் அறவேண்டும்-உன்
பாததரிசனம்பெறவேண்டும். இந்த

சரணங்கள்.

1. தினமும்உன்பதமலர் தொழவேண்டும்-நான்
தேகபரவசமா யெழவேண்டும்
அனல்மெழுகாயுருகி யழவேண்டும்-இனி
ஆனந்தக்கடலில்நான் விழவேண்டும். இந்த

2. தேகவிஷயாதிகள் கெடவேண்டும்-ஞான
தீபத்தைஎன்னுளத்தில் இடவேண்டும்
பாகஅறப்பயிரை நடவேண்டும்அந்தப்
பயிர்க்குன் அருட்புனலை விடவேண்டும். இந்த

3. மோகப்பசாசுதனை வெலவேண்டும்-நல்ல
முத்திநெறியிலே செலவேண்டும்
நாகமெனும்புனலைக் கொலவேண்டும்-வேத
நாயகனேயுன்னமஞ் சொலவேண்டும். இந்த

19. இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தப்பிழைகளெல்லாம் பொறுப்பாயே-பாச
பந்தங்களை வேரறுப்பாயே,

அநுபல்லவி.

சொந்தப்பிள்ளைகளான தூயவர்க்குப்பிதாவே
அந்தப்பரமசுகம் அளிக்குங்கனதாதாவே, இந்த

சரணங்கள்.

1. ஆதியானபரஞ்சோதி உன்னைநான்வெறுத்தேன்
என்மனந்தனை
ஆகமாதிகள்சொல் யோகசாதனையில்நிறுத்தேன்
அனுதினமும்
வேதவேதியர்கள்ஓது நீதியையுமறுத்தேன்
சமர்த்தன்போலே
விம்புபேசிப்பெரும்பாய்பு போலவிடம்பொறுத்தேன்
சதாகாலமும்
பூதலவாழ்வுதனைநாடினேன் மறு
மாதர்கள்சுகந்தனைத்தேடினேன் பஞ்ச
பாதகரோடுஉறவாடினேன் கன
காதகனென்றுபெயர் சூடினேன்
ஆறுலர்க்கமுதியாமலேதடுத்தேன்
சாதுஜனங்களைக்கண்டேதடிஎடுத்தேன். (இந்த)

2. நேயமானதந்தைதாயைச்சற்குருவைப்பழித்தேன்
ஜெபதபத்தை
நித்தியகர்மங்களைப்பத்திமார்க்கங்களைஒழித்தேன்
கைப்பொருளெல்லாம்
காயமோகசுகமாய்வாழ்விற் செலவழித்தேன்
உனைத்தொழாமல்
காட்டில்வாழ்மிருகக்கூட்டம்போல்நாள்கழித்தேன்
அனுதினமும்
தாப்ரைக்குறைசொல்லித் தூற்றினேன் பெருந்
தீயரைத்தினந்தினம் போற்றினேன் நல்ல
ஞாயவழக்குகளை மாற்றினேன் பதி
னாயிரம்பொய்சொல்லத் தோற்றினேன்
வாயில்வந்தபடிவம்புகள் தொடுத்தேன்
கோயில்மணியமெனக்குடிகளைக்கெடுத்தேன். (இந்த)

3. பூவிலேபெரியபாவியென்றுபேரெடுத்தேன்
புரட்டுருட்டும்
பொய்யும்வஞ்சனையுஞ்செய்யுமார்க்கந்தனையடுத்தேன்
உன்றுமந்தனை
நாவிலேஎனதுபாவிலேசொலாமல்விடுத்தேன்
ஞானியைப்போல்
நாட்டில்மாயவேஷங்காட்டி என்னைநான்கெடுத்தேன்
அனுதினமும்

பாவமும்பழிகளுந்தாங்கினேன் பெருங்
கோவமுங்குரோதமும்ஓங்கினேன் புண்ணிய
ஜீவனஞ்செய்யாமல்தூங்கினேன் நல்ல
பாவனஞ்செய்யும்வழிநீங்கினேன்
ஆவலாகப்பலர்பொருள்அபகரித்தேன்
காவலாநெறியைக்கடந்துசஞ்சரித்தேன். (இந்த)

4. வாரங்கூலிகளிற்சோரஞ்செய்துநான்குறைத்தேன்
பிறரிடத்தில்
வாங்கியபொருள்களைஈங்கில்லைஎன்றுநான்மறைத்தேன்
பஞ்சத்திலேவியா
பாரஞ்செய்யப்பலசேரில்நெல்லைக்கட்டிநிறைத்தேன்
நல்லதண்ணீரைப்
பாழிலேசகலநாழிகையும் விழலுக்கிறைத்தேன்
முதலினொடு
நேரவட்டிதனைக்கூட்டினேன் வெகு
தூரம்அகவிலையைநீட்டினேன் வழக்
கோரஞ்சொல்லிச்சண்டைமூட்டினேன் உப
காரஞ்செய்தோர்க்குக்கத்திதீட்டினேன்
தாரம்பிள்ளைகளுக்குந்தான்செய்தேன்வஞ்சம்
நேரில்வேதநாயகாநின்னடிதஞ்சம். (இந்)

---

17-இராகம்--சுருட்டி-திஸ்ரஜாதி-ரூபகம்.

பல்லவி.

தேவாதிதேவனே-தயை-தயை-செய்தருள்வாயே.

அநுபல்லவி.

பாவஉடலம்எடுத்துநீளும்
பாதகனும்என்னைநாளும்
பந்தப்பகைசாடாமல்
சிந்தைத்துயர்கூடாமல்
நிந்தைப்பழிமூடாமல்
இந்தப்படிவாடாமல்.

சரணங்கள்.

1. கற்பகோடிகாலம்போல அற்பவாழ்வினை மதித்தேன்
காரமாகஎந்நேரமும் அகங்காரம்நெஞ்சினிற் பதித்தேன்
தற்பராஉன்பொற்பாதாம்புயந் தாழ்ந்திடாதெனைத்துதித்தேன்
சார்ந்தமாம்யோகாந்தமார்க்கஞ்சார்ந்திடாமற் குதித்தேன்

நற்பதந்தனைநாளும் சார்ந்து நல்ல
நாசவினைகள்யாவுந் தீர்ந்து
ஞானந்தனிலே நீட
மோனந்தனையே நாட
வானந்தனையே தேட
ஆனந்தமுமே கூட (தேவாதி)

2. பாசமாம்பிசாசம்என்மனம்வாசஞ்செய்து நிலையே
பாபமுங்கடுங்கோபமும்பலர்சாபமும்பெரு மலையே
நேசமும்விசுவாசமும்பிரகாசமும்எனக் கிலையே
நிந்தையான அகந்தைமுடும்என்சிந்தையுங்கடுஞ் சிலையே
ஈசனேயென்பாவம் நீக்கி
என்னையேஉன்தாச னாக்கி
இன்பக்கடலே சேரத்
துன்பக்கடலே யேற
அன்பர்க்கினமே சார
என்பொய்க்குணமே தீர (தேவாதி)

3. அன்பர்களிக்கஇன்பம்அளிக்கும்ஆனந்தப்பெரும் நதியே
அனவரதமுங்கனவிரதர்கள் அகத்தில்ஒளிரு மதியே
துன்பசாகரம்என்பதுகெடத்தோன்றிடும்பர கதியே
தொண்டன்வேதநாயகன்மணப்பெண்டகமகிழ் பதியே
நின்பதந்தன்னைநாளும் ஏத்தி
நேசமாய்க்கவிமாலை சாத்தி
நீதிப்பயனை விள்ள
ஆதிப்பழியே தள்ள
வேதப்பயனே கொள்ள
போதத்தினிலே துள்ள (தேவாதி)



18-இராகம்—பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தவிஷமேபாபவிர்த்தி
எனக்கருள்வாய்ஸ்வாமி. . . இந்த

அநுபல்லவி.

எந்தவிஷத்தில்சாவுவருமோவென்
றேங்கியேநான் பயந்தேனேஉயிர்
நீங்கிடிலென்னசெய்வேன்-சுரர்கோனே. இந்த

சரணங்கள்.

1. காலையோமாலையோநாளையோசாவெனுங்
காலங்கணக்கறியேனே வந்த
வேலைமுடியுமுன் ஓலையனுப்பிட
வேண்டாஞ்சொன்னேன்சிறியேனென்னை
ஆண்டாலுனைப்பிரியேனே பெரியோனே (இந்த)

2. பொட்டென்றுதேகந்தான்சட்டென்றுவீழ்ந்திடில்
இட்டஒருவரில்லாரே குழி
வெட்டென்பர்பிரேதத்தைக்கட்டென்பர்மண்ணைமேற்
கொட்டென்பர்போவார்பொல்லாரே ஆன்ம
நஷ்டம்வராமற்கண்பாரே துயர்தீர (இந்த)

3. கப்பம்இல்லாமலேஎப்படியேனுங்
கடலைக்கடக்கவொண்ணாதே நாளும்
அப்படியின்பதத்தெப்பமில்லார்க்கந்த
ஆநந்தவீடெண்ணாதே-நல்ல
ஞானந்தருவாயிப்போதே கைவிடாதே (இந்த)

4. ஆதிமத்தியாந்தரகிதப்பிரபோத
அபேதபுராதனநாதா நாளும்
காதலுடன்வேதநாயகனுள்ளக்
கமலந்தங்குந்திருப்பாதா எனக்
கமலந்தாஇன்னம்வாதா கிடையாதா (இந்த)

16-இராகம்-கல்யாணி-அடதாளசாப்பு

பல்லவி.

இந்தவிஷமேபாபவிவர்த்தி
எனக்கருள்வாய்சுவாமி.

அநுபல்லவி.

எந்தவிஷத்திலசாவுவருமோவென்
றேங்கியேநான் பயந்தேனேஉயிர்
நீங்கிடிலென்னசெய்வேனே-சுரர்கோனே.

இருகாலில்நவவாசல் உடல்மனையை வீக்கினாய்
இன்பங்கள் நுகர ஐந்திந்திரியம் ஆக்கினாய்
அரியஆன்மா அங்குகுடியுறப் போக்கினாய்
அந்தஆன்மாவில்நல்லறிவினைத் தேக்கினாய் (இந்த)

2. பூமியாகியவீ டமைத்தாய் பஞ்ச
பூதாதிஊழியர் சமைத்தாய்
மாமதுரவுணவுகள் கொடுத்தாய் அந்த
வானமாம்பந்தலும் எடுத்தாய்
சோமசூரியதாரகாதீபம் ஏற்றினாய்
சுகவாயுவால்உஷ்டண சோகத்தை மாற்றினாய்
சேமஉணவாக்கவேதேயுவினை ஆற்றினாய்
சீதக்கடங்கொண்டு தண்ணீரை ஊற்றினாய் (இந்த)

3. கடலாறுகுளம்ஓடை தந்தாய் மலர்க்
காவுகளும்உதவினை யெந்தாய்
தடமலைதருக்களும் வகுத்தாய் வசனம்
சார்மிருகபக்ஷிகள் பகுத்தாய்
திடமானநவமணி உலோகாதி நீட்டினாய்
ஜெகஜோதியாகவேசிங்காரம் நாட்டினாய்
அடமின்றிநானாவினோதங்கள் காட்டினாய்
ஐம்புலாதிகளுக்கும்இன்பங்கள் ஊட்டினாய் (இந்த)

4. சிலபரவைகானஇசை பாடும் வேறு
சிலபறவைதிருநடனம் ஆடும்
பலமிருகம்நரர்வேலை புரியும் நல்ல
பசுவாதிபாலினைச் சொரியும்
மலர்கனிகள் கால்விழலைமரமெலாம் நீட்டுமே
மண்ணன்னம்விளைவித்துவயிறார ஊட்டுமே
பலதாருமெங்களைத்தலைமுழுக் காட்டுமே
சர்வபொருள்களும் நல்லசந்தோஷ மூட்டுமே (இந்த)

5. பித்தர்க்குநீசெய் பாரகமே வளம்
பெரிதெனினுமீ தற்பசுகமே
சுத்தர்க்குநீசெய் பேரகமே பரம
சுகமெனவிரும்புமென் அகமே

பத்தர்அநுகூலசற்பரமகா ருண்ணியனே
பகிரண்டகோடிகள்பரித்திடுந் திண்ணியனே
வித்தகசொருபமேமேவுசற் புண்ணியனே
வேதநாயகன்உள்ளமீதுவளர் கண்ணியனே. (இந்த)



20-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

சிந்தைக்குள் உறைந்தும்நீ சிந்தத்துயரந்தனைத்
தெரியாயோசுவாமி.

அநுபல்லவி.

அந்தரம்புவியெங்கும் அரசாக்ஷியளிப்போனே
எந்தப்பொருளின்உள்ளும் இருந்தகங்களிப்போனே (சிந்தை)

சரணங்கள்.

1. பாலையும்விஷம்ஆக்கும் பாம்புபோல்கொடுமனம்
பலசுகத்தையும் துன்பம் ஆக்குமே
பூலோகமெல்லாம்வசமாயினும் வேறொரு
புவனத்தையும்பிடிக்க நோக்குமே
காலமுழுதும்இந்தக்கருத்தே யாதனுரூபம்
கலியாணவீட்டிலும்கட்டிக்கொண்டழும்சோபம்
மேலவனேஎனக் கிதுவாய்த்த தென்னபாவம்
வேதநாயகனே பாராயோயென் பரிதாபம் (சிந்தை)

2. இருதலைக்கொள்ளிநடுவிருக்கும் எறும்புபோல
எந்நாளுந்தொலையா விசாரமே
ஒருசாணாகிய உதரக்குழியடைக்க
உலகில்படுங்கஷ்டம் அபாரமே
தரணியின்வாழ்வென்பதுதானே விஷவிருக்ஷம்
தாசார்வ இதில்வரும் சங்கடம் கோடிலக்ஷம்
தருமயோகாந்தநிலைசார்தல் உத்தமபக்ஷம்
சர்வாநுகூலாஉனக்கெல்லாம் பிரத்தியக்ஷம் (சிந்தை)

3. போர்க்களநடுவிலேகுடியிருப்பது போலப்
புலச்சத்துருக்களின்போ ராட்டமே
சேர்க்குந்தசைவடிவாந் தேகமிது பிணியுந்
தீவினைகளும்வளர் தோட்டமே

பார்க்கின்இதுவே ஆசா பாச நடனசாலை
பகலும் இரவும்இது படியுமே மோகவேலை
தீர்க்கவைத்தியர்க்குத்தினமும் கொடுக்கும்வேலை
தினம்வேதநாயகா சேர்ந்தேன் உன்திருக்காலை, சிந்தை



21–இராகம்-யமுனா-கல்யாணி–ரூபகதாளம்.

பல்லவி.

சரணம்சரணம் நாதா-உன்
சரணம்தர ஒண்ணுதா.

அநுபல்லவி.

திரணமாகிய காயமே இதில்
தினம் அனந்தம் அபாயமே
மரணம்வருமுன் னேயமே பெற
மகிழ்ந்தருள் சகாயமே கோடி (சரணம்)

சரணங்கள்.

1. பாவியேன்இரு தயமே பல
பாதகங்களின் மயமே
மேவிடும்துர்வி ஷயமே வினை
விலக்கி அருள்நன் னயமே
மாயவினைகளை மாற்றுவாய் எதிர்
வந்தென்சிந்தையில் தோற்றுவாய்
சேவைதந்தெனைத் தேற்றுவாய் இந்தத்
தியனைக்கரை யேற்றுவாய் (சரணம்)

2. மதம்இராகத்து வேஷம் பொய்
வஞ்சகம்பல தோஷம்
எதிலும்நான் விசேஷம் எனக்
கில்லைபுண்ணிய விசேஷம்
மதனப்பேயை ஓட்டுவாய் நல்ல
மார்க்கத்திலெனைக் கூட்டுவாய்
விதனநகரைப் பூட்டுவாய் உன்
வீட்டுக்குவழி காட்டுவாய் (சரணம்).

3. தாசர்கள் பரிபாலா கண
சாத்விக குணசீலா
நீசர்கள் பிரதிகூலா சத்ய
நீதியுறு செங்கோலா
ஆசறுமுதல் நூலனே அகி
லாண்டகோடிவி சாலனே
நாசரகித மூலனே வேத
நாயகன் அநு கூலனே (சரணம்)

---

22-இராகம்-கர்கடா-ஆதிதாளம்.

பல்லவி.

சீலம்நீதா தேவநாதா
சிறியன்மீது வாதா—அபேதா

அநுபல்லவி.

மூலகாரண தயாபா வேதா
மோக்ஷசாம்பிராச்சியப்பிரதாதா (சீலம்)

சரணங்கள்.

1. நன்மைதுன்மைஇன்ன தென்பறுதெரியேன்
ஞானமார்க்கந்தனையே அநுசரியேன்
சின்மையாநந்தனே ஜெயம்புரியேன்
தீயனானநான் பாபத்திற்பெரியோன் (சீலம்)

2. தாயிருக்கப்பிள்ளை தயங்குதல்சரியோ
சாமிநீ என்மனம் வாழ்வும்வரியோ
நீயிருக்கஎன்தன் துன்பம்உபரியோ
நீயேதாமசிக்க என்னுடல்கிரியோ (சீலம்)

3. ஜீவசிருஷ்டிஸ்திதி லயஅதிகாரா
ஜென்மசாபல்லியப்பிர தானஉதாரா
தேவதேவகண பூசிததீரா
சிறியன்மேவதநா யகன்உபகாரா

23-இ-ம்-உசேனி-ஆதிதாளம்.

பல்லவி.

நின்பதமே துணை ஐயா-மனத்
துன்பம் அகல அருள்செய்வாய்.

அநுபல்லவி.

இன்பமகோததியே இனியதயாநிதியே
அன்பர்பரகெதியே அமரர்க்கதிபதியே. (நின்)

சரணங்கள்.

1. என்மனம்இளகாத பொருப்பே மாயை
என்றைக்கு அதிற்குடி யிருப்பே
தன்மமே அதற்கரு வருப்பே கெட்ட
தாமசகுணமென்றால் விருப்பே
நன்மைகெடுக்கும்இச்சை நாசக்கொடு நெருப்பே.
தின்மையெல்லாம் அகலத் திருவருட்கண்திருப்பே. (நின்

2. ஏதும் அறியேன் ஞான சாஸ்திரம் புவ
னேசா உனக்குநான் எம் மாத்திரம்
சோதனைக்கெளியேன் அபாத்திரம் அதி
தூயனே என் இன்னம் க்ஷாத்திரம்
வேதனைமிகக்கொண்டு மெலிவுற்றேன் அகோராத்திரம்
சாதகமுறவே நீ தருவாய்மெய்ஞ்ஞான நேத்திரம் (நின்)

3. நீசனென் வினைக்கெல்லா மூலம் எந்தன்
நெஞ்சஞ்செய்வதும் பிரதிகூலம்
பாசபந்தஉலக ஜாலம் தன்னில்
படிந்துநொந்தேன் பலகாலம்
ஈசனே கேளாயோ ஏழைநானிடும் ஓலம்
தாசன்வேதநாயகன் தனக்குநீயருள் சீலம் (நின்)

—[*]—

24. இராகம்-முகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆள்வாயெனதுள மூள்வாயெனக்குன்றன்
அடியிணையே துணையே.

அநுபல்லவி.

நீள்சுகக்கனியனே நேசருக்கினியனே
நாள்வளர்தனியனே நயமறைத்தொனியனே (ஆள்)

சரணங்கள்.

1. பேதைநான் பயனில்லாப்பேச்சிற்சண்டப்பிர சண்டம்
பிறரைமயக்குவதிற் பெறியஉற்பாத பிண்டம்
வேதவினைஎனக்கு விளைசருக்கரைக் கண்டம்
விரைந்தருள் புரிஉனக் காயிரங்கோடி தண்டம்
வேதனே வயர-சாதனே-ஆசீர்
வாதனே-சுரர்புகழ்கொள்-காதனே-நாதனே-எனை. (ஆள்)

2. மனமெனுங்குரங்குக்குக் கன அறமே உபேக்ஷை
வாதனைநீக்கிடாமல் எதின்னமும் பரீக்ஷை
தினகரரூபனே திவ்யமெல்லாஞ்ஞான தீக்ஷை
திடமுடன்கொடுத்தருள் அதுவேயெ ன தபேக்ஷை
தேவனே-மனோ-பாவனே-மறைசொல்
நாவனே-தயைநிறை-சுபாவனே-ஜீவனே எனை. (ஆள்)

3. நிகரில்கனதெய்வீக-நின்மல சுலக்ஷண
நித்தியம்வினையும்பக்தர் நெஞ்சப் பிரதக்ஷண
சகலஜீவாத்மகோடி காக்கும் சம்ரக்ஷண
சாஸ்திரம்புகலும்சுரர் ஸ்தோத்திரா மிர்தபக்ஷண
தாங்குவாய்-நெஞ்சில்-ஓங்குவாய்துயரம்
நீங்கவேவேதநாயகன்-பாங்காய்-நின்றனுதினம். (ஆள்)



25-இ-ப் ஆ பி-ஆதிதாளம்.

பல்லவி.

தேவநாயகனே என்மீதிலுன்
திருவுளம் இரங்குவையே.

அநுபல்லவி.

ஜீவன்முக்தியூர்ஜித சீலர்பிதுரார்ஜித
தாவில்அதிபூஜித சர்வசமயோசித. (தேவ)

சரணங்கள்.

1. கரதலாமலகம்போல் உனக்குயாவுந் திர்ஷ்டாந்தம்
கர்த்தனே அறியாயோ நீஎனது விர்த்தாந்தம்
பரவும்பதங்கொன்றால் பாலகர்க்கும் ஆனந்தம்
பலபதங்கேட்டுந்தயை பண்ணுயே தோசித்தாந்தம்
பற்பல-கற்பல-உற்பவ-வுற்பன
கற்பனை-செப்பரும்-அற்புத-உற்பவ (வேத)

2. தனமிகுவேண்டுவோர்க்குச் சல்லிபோடு — தானமோ
தாகமுள்ளோர்க்குக் கானல்ஜலமது — பானமோ
கனசுகந்தேடெனக்குக் கவலைசன் — மானமோ
கதியருள்வாயுனக் கதுபாய — தினமோ
கர்த்த-சமர்த்த-பிரசித்த-சம்வர்த்தன
பக்தர்கள்-சுத்த-அகத்துறு-நிர்த்தன (தேவா)

3. தினமும் அனந்தபாவஞ் செய்வதென் — சாம்பிரதாயம்
சிந்தைக்கறங்கசப்புசேர்வேப்பிலைக் — கஷாயம்
இனவேதநாயகனென்றேற்றேன் உன் — நாமதேயம்
எனக்கல்லாவிடினும் அப்பெயர்க்கேனுஞ் — செய்சகாயம்
எம்பர-உம்பரும்-அன்பரும்-நம்பிய
அம்பர-சம்பிரம-இன்பம்-நிரம்பிய. (தேவா)

—]*[—

26-இ-ம் அடாணு-ஆதிதாளம்.

பல்லவி.

ஈசாவின் பொற்பாத மலர்நம்பினேன் என்னை
இக்ஷணமேவந்து ரக்ஷணஞ்செய்தருள்.

அநுபல்லவி.

தாசர்மனகம லர்சனகேசர
சாசுவதயோக சாம்பிராஜ்யகிரகேசுர
ஆசைக்கினிய அவாங்மனோகோசர
அண்டபிரமாண்ட அகண்டசராசர (ஈசா)

சரணங்கள்.

1. எத்தனையோபேர் — சுசித்தமாய் வீட்டில்
எனக்கிடம் பூச்சியமா — தவை
சித்தங்கொள்வாயெனப் — பித்தனெனக்குக்
தினமனோராச்சியமா — நல்ல
சித்தனே இன்ப — யிருத்தமுத்தி — நலன்
நீதரில்வாணவ — ரோதுவரோ — கலனை
சத்தில்வழக்கவர் — பேசிஎன்ன — பலன்,
தாயேஉற்றதுணை — நீயேபின்வேறிலன் (ஈசா)

2. மாகுணபாதகனை  யோகமின்றிப்புவி
வாழ்ந்தவர்தா மெவரோ  எங்கும்
வரும்நெஞ்சன்னரு  சாகவராதிதற்
கேகுறுக்குச்சுவரோ  விஷ
நாகமாயைக்கெங்குஞ்  சர்வ  கொள்ளையோ
நான்பயனில்லாமற்  பேசிநீங்  கிள்ளையோ
ஆகிலுமென்புத்தி  தான்சுத்த  வெள்ளையோ
ஐயனேநானென்ன  தாயிலாப்  பிள்ளையோ.  ஈசா

3. வந்துன்தரிசனந்  தந்தருளிலென்
மனக்குறைதீரேனோ  உன்தன்
சுந்தரபாதமென்  சிந்தனையூன்றிற்
சுகக்கடல்சேரேனோ  பெரும்
பந்தநெருப்புக்கென்  சிந்தனை  செத்தையா
பாவியென்றென்னைக்கை  நீவிடில்  சத்தையா
விந்தைநலந்தந்திடல்  பெரு  வித்தையா
வேதநாயகன்பங்  கென்ன  சொத்தையா.  ஈசா



27-இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதியேபரஞ்சோதியே எனை
ஆதரித்தருள்வாயே

அநுபல்லவி.

ஓதிஉணரவொண்ணு தோங்குங்குணாகர
நீதிவடிவமுறு நின்மலாகரா

சரணங்கள்.

1. உலககாரியத்தில்  நான்வெகுதிராணி உன்னை
உன்னுவதிற்கேவலம்  அப்பிராணி
நலம்என்பதெனக்  குண்டோமாகணி என்தன்
நவையேற்றப்போதுமோ  ஆயிரந்தோணி
மலைவசமாகிச்  சோர்ந்தேன்
தலைவாஉன்னடி  சார்ந்தேன்
பதிக்கும்அடியர்கள்  துதிக்குஞ்சூரிய
குதிக்காதெனை  உதிக்கும்வீரிய  (ஆதியே)

கண்ணுள்ளபோதல்லவோ கண்காட்சி சிவன்
கழியுமுன்னல்லவோ புண்ணியமாட்சி
மண்ணில்எனக்கு ஞான அரசாட்சி மிக
வாய்க்குப்படிஐயனே நீகடாட்சி
எண்ணரிய பிரதாபா
நண்ணரும் சுப்பிரதீபா
இணங்கும்அமரர்கள் வணங்கும்பெருவர
மணங்குலாவு சுகுணங்கொள்குருபர.(ஆதியே)

தீதுபொறுத்தால் தெய்வகுலதர்மமே
செய்கைகளே மனுஷகுலதர்மமே
ஓதிவிட்டேன் உனக்கென்உள்மர்மமே-என்மேல்
ஓகோஐயனே இன்னம்ஏன்வர்மமே
பாதகம்அணி வேதநாயகன்பணி
படர்ந்ததிருவருள் அடர்ந்திடும்பிரம
கடந்தஞானியர் தொடர்ந்தசம்பிரம

——(❋)——

28-இராகம்-கேதாரம்-ஏகதாளம்.

பல்லவி.

தேவனே உனைநம்பினேன்
அடியேனை ஆண்டருள்.

அநுபல்லவி.

தேவா-தரித--அபாவ-சுகுண-சுபாவ
மாநு-பாவா-வாவா தேவனே

சரணங்கள்.

1. ஐயாஇல்லைஅறு பொய்யாம்உலகினில்
மையாவகைஅருள் செய்யாயோஉயர் தேவனே

2. வாராயோமுகம் பாராயோஅருள்
கூராயோவினை தீராயோகன தேவனே

3. பெரியாய்கைவிடல் சரியாநான்வினை
புரியாவிதம்அருள் செரியாயோஉயர். தேவனே

4. நொந்தேன் வினைசுட வெந்தேன் உனதிடம்
வந்தேன் சுகமில்லை தந்தே அருள்புரி — தேவனே

5. நாதா அருள்ஒன்றுதாமனம்இரங்
காதா அனுதினம் வேதநாயகன் பணி. — தேவனே



29-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

பரனே அடியர்மனோ-கரனே-நியமதின
கரனே-நீ அருள்-வரனே

அநுபல்லவி.

உரனேமிகும்புவன தரனே அகண்டசரா
சரனேபரமசுக கரதன தீரனே அறும் — பரனே.

சரணங்கள்.

என்னைவந்திரக்கும்வழி தன்னைநான் தள்ளிவிடில்
ஈசனே கோபம்பண்ணுவாயோ தங்கை
அன்னையேஎன்னையிரக்கும் என்னைநீதள்ளில்எனக்கும்
அவ்விதமென்றே எண்ணுவாயோ
முன்னைநீ அநேகரை உன்பொன்னடியிற்சேர்த்தனை
இன்னமும்பலபேர்தமைப் பின்னும்வினைதீர்த்தனை
என்னவோநான் கேட்டுன் மீதுசொன்னேன்பலகீர்த்தனை
பின்னையொன்றும்வேண்டேன் அருள் உன்னையிதென்பிரார்த்த
[னை. பரனே

2. உத்தமனேநான்பெரிய பித்தனுயினும்உனை
அடுத்தவனைஉன்னுவாயோ பாரில்
சித்தமிசைபத்திய மிகுத்தபாலகனைக்கை
விடுத்தகலுவாள்தாயோ
முத்தொழில்முதல்தொழில் கொண்டுசெய்தாயென்சடம்
முத்தஞானம்அளித் தெனைக்காத்தருளாயென்னுடம்
அத்தனே அவ்விரண்டாந் தொழிலில்என்ன சங்கடம்
அதுதரில்மூன்றாந் தொழிற்கஞ்சிடேன் இதுதிடம். — பரனே

2. பாடுகளியிற்கற்பனை தேடுவதல்லால் உன்னருள்
கூடும்வகைகுறியேனே-என்னை
நாடும்எவரோடுமேவா தாடுவதல்லால்என் வாயை
மூடும்வகை அறியேனே
வாடுதலிற்பாதமலர் சூடுபெரியோராக
வாசபுவனேசவுர பாசவினைமாறாக
வீடுதவுதியாக அலையாடுகெடற்பாராக
மீதுவேதநாயகன் எப்போதுமேகொள்தாரக (பாவனை)



30-இராகம்-பியாகடை-திரிபுடைதாளம்.

பல்லவி.

அம்புயப்பதம்நம்பினேன்ஐயா-பரலோகசாதக
சம்பிரமத்தைவிரும்பினேன் மெய்யா
கனதியாகக்கையா.

அநுபல்லவி.

தம்பமாம்அவலம்பம்வேறில்லையே தேவாதிதேவர்கள்
சகிதமாகிய சுகிதமாமல்லையே மெய்ப்போதகில்லையே. (அம்புய)

சரணங்கள்.

1. இனமும்அலையுமென்மனமேகிசகமா-அடியேனுன்பால்இஷ்ட
சித்திவேண்டியே நித்தியம்யாசகமா
கனஅநீதனென்மீதரோசகமா-என்சொல்உன் காதுக்குக்
கடினமாகிய கொடியவாசகமா
நர்ஞெருமசகமா. (அம்புய)

2. மண்ணின்வாழ்க்கையில் எண்ணில்யாதனையே அதுநீங்கவேயரு
மண்ணிடாமலென் இன்னஞ்சோதனையே (ள்
திண்ணியம்பெறு புண்ணியசாதனையே-அடியேனுக்கேஸ்வா
தீனமாகச்செய்ஞானபோதனையே
செய்தேன்வந்தனையே. (அம்புய)

3. எண்ணிமகிழ்ந்திடு புண்ணியவிக்கிரகமே-பரிசுத்தசீலர்கள்
இஷ்டபூரண அஷ்டவிககிரகமே
விண்ணிஞேர்தினம் நண்ணுசுக்கிரகமே-இனிநீபுரிந்தருள்
வேதநாயகன் தனக்கனுக்கிரகமே
பணியார்உக்கிரகமே (அம்புய)

31-இராகம்—ஆகிரி-திரிபுடை-தாளம்.

பல்லவி.

சம்மதியெனக்கருளெய்யனே உனைநினைக்க
நன்மதிதந்திடல் ஐயனே.

அநுபல்லவி.

அம்மாவென்றழ மேன்மேலும்
வெம்மனநோயே சூழ்ந்தாலும். (சம்மதி)

சரணங்கள்.

1. தன்னைஉன்னவே கூடாதென்றே தடைசெய்வோன்தான்
இங்கிலத்துண்டோ குணக்குன்றே
பின்னையே தொழவிரதம்
நேர்ந்துனை அனவரதம்
உன்னவே என்மனோரதம்
உதவுவாய் கருணாமிர்தம்
ஓங்கிவளர்தனம் நீங்கிபொழியினும்
வீங்கியுடல்பிணி தாங்கியழியினும். (சம்மதி)

2. பதமலர்மேல் ஆசைகொண்டேனே உலகவாழ்வு
சதமலவென் றுண்மைகண்டேனே
நிதமுனைப்பணியுமதி
நீதரஇல்லையோகதி
அதிற்குறையுமோஉன்நிதி
அண்டினேனுனுன்சந்நிதி
அடரும்வறுமையோ டிடர்கள்சூழினும்
படருமனத்துயர்க் கடலில்ஆழினும். (சம்மதி)

3. உத்தமபிரமசைதன்னியமே சௌஜன்னியமேமெய்ப்
பத்தர்கள் அல்லாதார்க்கன்னியமே
சுத்தமநுபாஷண
சோபனகுணபூஷண
வித்தகவிசேஷண
வேதநாயகன்போஷண
விலகியேஎனை உலகம்நகைக்கினும்
கலகமாகவே பாலர்கள்பகைக்கினும். (சம்மதி)

32-இராகம்-கேதாரம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனே-உயர்-மெய்யனே.

அநுபல்லவி.

உய்யவே அருள்புரி செய்யபதந்தந்தெனை (ஐயனே)

சரணங்கள்.

1. ஈசனே நான் ஆத்ம இரக்ஷண்ணியமே பெற
இரங்கியருள் கடாக்ஷ வீக்ஷண்ணியமே
தாசன் நானுனக்கென்றுந் தாக்ஷண்ணியமே
தந்தருள்வாய் விவேக நீக்ஷண்ணியமே (ஐயனே)

2. இகவிதிஅழிந்து போம்வில்லாது அதை
ஈந்தனம்போது மென்றுல்செல்லாது
விசழ்வித்தியசுகந் தந்தால் அல்லாது சற்றும்
வில்லாமல்நச்சும் என் வாய்பொல்லாது (ஐயனே)

3. கோதையர்மைந்தர் முதற்பரிஜனமே சந்தைக்
கூட்டம்அவர்மேற் கொள்ளுந்தரிசனமே
வேதைகரும்இது விதரிசனமே-அருள்
வேதநாயகனுக்குன் தெரிசனமே. (ஐயனே)



33-இராகம்-ஐயந்தஸ்ரீ ஏகதாளம்.

பல்லவி.

நாதாநிரந்தர-விநோதா-உன்தன்
பாதாரவிந்தம்-எனக்-காதாரம்-தாதா.

அநுபல்லவி.

வேதாந்தசார நடபோத பஞ்ச
பூதாந்தகால விபரீதா பிரக்கியாதா ஜெக. (நாதா)

சரணங்கள்.

1. பேசருஞ்சர்வ புவனேசா நல்ல
தாசர்மனோலயவாசா பாவநாசா ஜெக (நாதா)

2. மாவரந்தரலாகாதா வினை
போவெனநீசொலிற் போகாதா சாகாதா புவி (நாதா)

3. மாயையின்சப்ததேமிசமா அந்தப்
பேயைக்கொல்வ தனக்கவசமா தாமசமாதெய்வ

4. அடியன்மனங் கடினஇரும்பா அருங்
கொடியவினை அதற்குக்கரும்பா நானோர் துரு
[ம்பாஜெக (நாதா)

5. ஆதிமத்திய அந்தரகிதா சுயஞ்
சோதிமய அமரர்சகிதா கனசுகிர்தமகி ()

6. மயாந்தகாரம் அகல்கிரணு வேத
நாயகன்தொழுமலர்ச்சரணு அந்தக்கரணு தெய்வ (நாதா)

---

34-இராகம்—புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

காக்கவேண்டும்-கடவுளே நீகாக்கவேண்டும்

அநுபல்லவி.

காக்கவேண்டும் எனைஅன்பன் ஆக்கவேண்டும் என்கவலை
நீக்கவேண்டும் பாவமெலாம் போக்கவேண்டும் இனியெனைக்

சரணங்கள்.

2. பண்ணியவினையுமனம் எண்ணியவினையும்வாக்கில்
நண்ணியவினையுந்தீரக் கண்ணியவரந்தந்தெனைக் (காக்)

2. ஆரணனேநீகொடுத்த தாரணிச்செல்வத்தின்மனம்
பூரணமானேன்பவவி வாரணசுகந்தந்தெனைக் (காக்க)

3. எந்தவேளைமரணமோ அந்தவேளைவந்துன்அர
விந்தமலரேங்கருஞ் சுந்தரஅடிதந்தெனைக் (காக்க)

4. பூதமுதலானஜீவ பேதகரணனேநாளும்
வேதநாயகன்பணிபிரக் கியாதபூரணனேஎனைக் (காக்க)

35-இராகம்-கேதாரகௌளம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஈசனேமல நாசனேமல வாசனேபிர காசனே.

அநுபல்லவி.

பாசஇருளினை நீக்குவாய் உன்தன்
பாதத்துக்கெனைஉற வாக்குவாய். (ஈசனே)

சரணங்கள்.

1. சிறியன்மதிவெறும் ஸ்தூலமே அதன்
செயலெல்லாம்அலங் கோலமே
குறிகொள்பாசவிர் மூலமே செய்து
குணக்தந்திடஇது காலமே
அறியநாடும் ஓலமே செவிப்
பொறிகொண்டுதவனு கூலமே. (ஈசனே)

2. அடரும்காமங்கொள் பேழையே நிகர்
ஆரும்உடலெனும் பாழையே
திடமென்றுன்னும்நான் ஏழையே குறை
தீரக்கற்றறி மோழையே
தொடுசிலேட்டுமங் கோழையே உயர்ந்
திடுமுன்தொலைப்பவப் பீழையே. (ஈசனே)

3. என்னைக்கெடுத்திடக் கச்சையே இடை
இறுக்கிக்கட்டிக்கொண் டிச்சையே
முன்னைவருப்பிடக் கொச்சையே கொண்டென்
முன்வந்திரந்தனன் பிச்சையே
உன்னுமாவரத தியாக மழைபொழி
பன்னும்வேதநாயகன்வெவ் வினைபொழி. (ஈசனே)

36-இராகம்-ஆனந்தபைரவி-ரூபகதாளம்.

பல்லவி.

நிரந்தரனே மா துரந்தரனே கண்
நிர்மலத்துவ தர்மகர்த்தத்துவ.

அநுபல்லவி.

பரந்தபொருள் சுரந்துகாத்தருள்
வரந்தந்தென்வினை விரைந்துதீர்த்தருள். (நிரந்தரனே)

சரணங்கள்.

1. சித்தமிரங்கிஎன் எத்தனை நீதயை
செய்யிற்பிழையேனோ-சுவா
சித்தனேஎன்பிழை எத்தனைஎன்னிலும்
நீக்கிநீதழையேனோ-நல்ல
உத்தமம்என்னிடம் சுத்ததரித்திரம்
ஒன்றேபலவிதம் என்துர்ச்சரித்திரம்
சித்தம்என்னெஞ்சம் உடுத்தமால்வஸ்திரம்
நீக்கிஎனைச்சேர் சௌபாக்கியசமுத்திரம். (பிரந்தரனே)

2. உதிமதிகதிர் முதலெல்லாஞ்செல்லும்
உன் ஆணைவழியே-எந்தன்
கதியொன்றே அந்த விதியைக்கடந்து
வளர்க்குமாபதியே-இந்தப்
பொதியமதிக்கேன் தனியரசாக்ஷியே
புனிதஞ்செய்குவ துன்பெயர்மாக்ஷியே
புனிதனென்பதற் கென்செய்கைசாக்ஷியே
பாவனனீயென ஈவாய்அத்தாக்ஷியே. (பிரந்தரனே)

3. பாரிருள்நீக்காத சூரியனாலே அப்
பாருக்கென்னசாரம்-ஞான
ஆரியனே உன்முன் சாரலாமோஎன்
அகத்தில்அந்தகாரம்-நாளும்
சாரமில்லாச் சமுசாரகோலாகலம்
சாருமெனக்கென்றுந் திரவியாகுலம்
வீரனேநீயறிவா யென்னபலாபலம்
வேதநாயகனே நீதருவாய்நலம். (பிரந்தரனே)

---

37-இராகம்-ஆனந்தபைரவி—ஆதிதாளம்.

பல்லவி.

அப்போதுனைத்தொழல் அரிதையா-உனை
இப்போதேதொழ அருள்செய்யாய்

அநுபல்லவி.

முப்போதும்உனைரு முதலேசுரர்தொழும்
அப்பாமரணம்உற் றடியேன்உடல்விழும் (அப்போ

சரணங்கள்.

திடமாய்கற்பாறைபோலே திரண்டுகோழைகள்மட்டும்
செறிநும்பேசாதலெண்ணந் சேர்ந்திறுகிப்பல்கிட்டும்
படர்ஜீவவாயுவெளிப் படஎங்கும்ஒழிமுட்டும்
பாரிலுவேலையெனப் பமொயைதொடைதட்டும்
பலங்கொள்உணர்வறு கலங்கிநிலைகெட
இலங்குடலைஉயிர் விலங்கிமெலிவுறும். அப்போ

மனைவிசேய்கடன்காரர் மண்டிவார்த்தைதவிரிப்பார்
வகையெமக்கென்னவென்று மணல்கயிறுத்திரிப்பார்
மனையிற்பொருளையெல்லா மாவலைபோட்டரிப்பார்
வகையெனறுமின்றேற்கையில் மணித்தொண்டையைநெரிப்பார்
மடங்குமூலகர முடங்குசெயலொடு
இடங்கொள்கானமும் அடங்கிமாளுறும் அப்போ

அழுகைக்குரலும்பல முழக்கமும்சாளுபேதம்
ஆகப்பலைபக்கத்தும் அடக்குமேகடளுதம்
விழுசையுறும்உடலின் வேதனையும்பிரமாதம்
வேதநாயகனேஅப் போதுனைஉன்னவேதம்
விரிக்கும்இடர்பலதரிக்கும்உடலினை
முரிக்கும்இசிவொடு மரிக்கும்வேளையில் அப்போ

38-இராகம்-காம்போதி ஆதிதாளம்.

பல்லவி.

எவ்வகையிலும் நானேநல்வழிபற்றி
உய்வகை அருள் கோனே

அநுபல்லவி.

செவ்வழியிற்போர்மணந் தேன்கள்வளரும்பூவே
பௌவமாகப்பேரின்பம் பழுக்குங்கற்பகக்காவே .எவ்வ

சரணங்கள்.

வறியர்க்கிடவென்றுமென் குறியனைகளிற்குலை
வாங்கநீட்டின்உலகும் குறியனைகளிற்குலை
பிறர்நோய்செய்யில்எனக்குப் பெருங்கோபாக்கினிச்சுவாலை
பேதைஎன்பிழைஎழு இடவேண்டுங்கோடியோலை எவ்.

நல்வழிநடக்கவென் றால்இருகாற்குந்தளே
நாளுந்துர்வழிநடப் பதில்எனக்குண்டோகளே
புல்வினேயென்செவி பொய்கள்நுழையும்வளே
புண்ணியோபதேசமென்றால் புகஅதில்லதுகளே (எவ்)

உன்னேத்துதிக்கவென்றால் உலகில்என்வாய்க்குநோயே
ஊர்வம்புபேசஎனக் குடம்புமுழுதும்வாயே
மின்னேநிகர்பிரபஞ்ச வேதனேநீக்குவாயே
வேதநாயகனுக்குச் சாதகமானதாயே (எவ்)



39-இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

ததியிதென்முகம் பார்ஐயா
கதிநினேயன்றி ஆர்ஐயா

அநுபல்லவி.

மதியுள்ளோர்கள் சுகிக்கும்அமிர்த
வாரிதியேஅருள்மாரியே ததி

சரணங்கள்.

உனக்கென்னெண்ணம் அந்தரங்கமா
உதவிதான்செய்யிற் பங்கமா
எனக்கிங்ககஷ்ய அங்கமா
இன்னமென்ன ஆடங்கமா
தனக்குநிகரில்லாத-ஞானசாகரா-குணுகரா ததி

அதஞ்செய்யும்வினே கற்கண்டோ
அதைத்தொலேப்பதேன் பலங்கொண்டோ
நிதம்நான்செல்வது வீண்தொண்டோ
நீயல்லாற்கதி வேறுண்டோ
பாதகமலங்கள் பரவும்பத்தர்கள் பாக்கியமே மனோக்கியமே, ததி

அனேக்குப்பிள்ளேமேற் குரோதமா
அருள்செய்வது பிரமாதமா
வினேக்குநான்முதற் பாதமா
விலக்கஇன்னம விவாதமா
நினேக்கும்வேதநாயகன்பணி-நீதனே பிரபோதனே. ததி

## 40.-இம்-கமாஸ்-ரூபகதாளம்

### பல்லவி.

ஜாலஞ்செய்வதேதோ-ஐயா
சீலம்ஈயொண்ணுதோமெய்யா  ஜாலம்

### அநுபல்லவி.

ஞாலமெல்லாந் தாங்குங்கையா
நற்குணமில் லார்க்குவெய்யா  ஜாலம்

### சரணங்கள்.

பெண்டுபிள்ளை  யோ  டினமே
பேய்ச்சுரை  படர்  வனமே
அண்டும்  இவரால்  தினமே
ஐயையோ  நொக்தேன்  மனமே  ஜாலம்

பாழுமனமே  மற்  கடம்
பண்ணும்  அகட  விகடம்
ஊழ்வினை  தரும்  சங்கடம்
ஒழித்துநீ  யருள்வாய்  திடம்  ஜாலம்

நீதிவழுவாச்  செங்  கோலா
நித்திய  சங்கீத  லோலா
வேதியர்  பாவுஞ்  சீலா
வேதநாயகன்  சேர்  காலா  ஜாலம்

---

## 41-இராகம்-சாமா திரிபுடைதாளம்

### பல்லவி.

வேதநாயகனே எவ்விதமும்உன்
பாதமலர் அருளே  வேத

### அநுபல்லவி.

போதநாயகனே பொய்நீங்கிய
புனிதநாயகனே மெய்தாங்கிய  வேத

### சரணங்கள்.

என்னுமனமேதூர்க்  குணங்கள்கொள் பாண்டம்
ஏதும்அறிகிலன்  ஞான  காண்டம்
பண்ணும்பாவங்களே  பிர  மாண்டம்
பகரும்  வார்த்தைகளே அபாண்டம்

| | | | |
|---|---|---|---|
| 2. | மண்ணில்அரு | திண்பூத | தேகம் |
| | வளர்ப்பதெனக் | ககலாஉத்தி | யோகம் |
| | புண்ணியஉடல் | வளர்ந்திடும் | வைதிகம் |
| | பூண்டிலேன் | அருள்வாய் | விவேகம் |
| 3. | விதனவிஷதரு | கிரகஸ்தாச் | சிரமம் |
| | விருப்புவோர்க்கிதில் | விலகிடாச் | சிரமம் |
| | பிதங்கொண்டேன் | இந்தவாழ்விலே | பிரமம் |
| | நீக்கவேதநாயகனே | அருள் | கிரமம் |



## 42-இராகம்-காம்போதி ஆதிதாளம்

### பல்லவி.

எனக்குக்கட்டியவீட்டை எனக்குக்கொடாதிருப்ப
தென்ன ஞானம் ஸ்வாமி

### அநுபல்லவி.

இனிக்கும்அவ்வீடுசெய்ததெங்கள் நிமித்தியமே
என்றுநீசெய்யவில்லையோவாக்கு தத்தமே
உனக்குநான்பிள்ளை யென்பதுலகப்பிர சித்தமே
உவந்துகேளாயோ என்பிரலாப சத்தமே. எனக்கு

### சரணங்கள்.

1. சித்தவிகாரமுறு நரர்க்குச்செய்யிவ்வுலகம்
சிறப்புள்ளதெனில்கோனே நல்ல
உத்தமர்க்கமைத்தநித்தி யானந்தமுத்தியின்பம்
உணர்வதெப்படி நானே
சுத்தமணிப்பொன் அங்கேதுரும்புகள் ஈட்டமே
தொல்லுலகின்பமெல்லாந் துன்பம்போல்ஓட்டமே
அத்தமியாநித்திய சூரியர் அன்பர்கூட்டமே
அனுதினம்எனக்கந்த வீட்டினில் நாட்டமே. (எனக்கு)

2. முகமுகமாகஉனைத் தரிசிக்கும்பாக்கியத்தை
மொழியவிணைக்க ஒண்ணுமோ இந்த
இகமிசைமனமோடு புலன்கட்கெட்டாதஅந்த
இன்பம்எப்போது நண்ணுமோ.

அகமிசைஉன்னஉன்ன ஆனந்தம்பொங்குமே
ஆயிரங்கோடி சூரியர்ஒளிமங்குமே
நிகரறுகீத விநோதங்கள்எங்குமே
நிரதிசயானந்தம் நிரந்தரம்தங்குமே
3. இகமனைகட்டிநரர் குடும்பப்பிரதிஷ்டைசெய்து
இணையறும் என்தாயே நித்திய
சுகமனைதன்னில் பிரவேசிக்கநீவநல்லை
சுதந்தரம் அருள்வாயே
அகிலலோகப்பிரபஞ்ச நாடகசூத்திரனே
அற்புதபரமசித்தி யர்ணந்தமோக்ஷத்திரனே
நிகரறுசௌந்தர நிர்மலகாத்திரனே
நிதம்வேதநாயகன்தொழும் குணபாத்திரனே (எனக்கு)



43. இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனே-உன்-அழகைக்காண
ஆசைநான்-கொண்டேனே. (ஐயனே)

அநுபல்லவி.

வையமிதுபல அழகையும்
வகைவகையா வகுத்துக்காட்டும் (ஐயனே)

சரணங்கள்.

1. உதயசூரியன் சோமன்தாரகை
உன்முன்னே மின்மினியே
நிதிநவமணி யென்னும்குப்பைகள்
நிகருமோஉனை இனியே. (ஐயனே)

2. கனியுந்தேனும்பாலும் சீனியும்
கண்டுங்கரும்புஞ்சிறுமை
இனியஉனது தரிசனத்தின்முன்
இவைகள்யாவும் வெறுமை. (ஐயனே)

3. செழுமையாகிய வண்ணமலர்கொள்
சிங்கார வனக்காட்சி
அழகின் ஆலயமான உன்முன்
அதற்கெத்தனையோ தாட்சி (ஐயனே)

4. அதிசவுந்தர மயில்குயில்கிளி
யாதிபறவைக் கூட்டம்
விதியின அவை செய்பின்ன மூகின்முன்
வெட்கிப்பஞ்சுபோ லோட்டம். (ஐயனே)

5. சத்தஸ்பரிச ரசரூபகந்தந்
தான் அல்லாத பொருளே
எத்தன்மைஉன தருவென்றறிய
இன்பக்காட்சியருளே (ஐயனே)

6. பதியில்நீசெய் பலபொருள்களைப்
பார்க்கபார்க்க வடிவே
அதிசயம்தரும் உந்தன் அற்புத
அழகினுக்குண்டோமுடிவே. (ஐயனே)

7. பிறந்தநாள்முதல் தாயைக்காணுப்
பிள்ளை தன்னைஒத்தேனே
சிறந்தவேதநாயகா உன்மேல்
சிந்தைபாவும் வைத்தேனே (ஐயனே)

---

சச-மாஞ்சி-ரூபகதாளம்.

பல்லவி.

என்னைநீ ஆளுவாய்-ஏகனே-யோகனே-என்னை.

அநுபல்லவி.

பொன்னைமாதைப்பூவை எண்ணம்
பூண்டுநான்கெடாத வண்ணம் (என்னை)

சரணங்கள்.

1. யாதனுசரீரமே யாதுமில்லைசாரமே
வாதபித்தவிகாரமே வாதனைகள் அபாரமே
மலநிவாரணு வடிவபூரணு
நலஉதாரணு ஞானகாரணு (என்னை)

2. எந்தநாளுங்கிலேசமே என்னெஞ்சிற்பிரவேசமே
பந்தவினையநாசமே பண்ணிநீசெய்வாசமே

பதிதபாவனு   பரமஜீவனு
அதிகசோபனு   அகிலஸ்தாபனு (என்னை)

3. அன்னை தந்தைநீ அல்லவோ   ஆயிரஞ்சொல்லலோ
என்னைமாயைகொல்லலோ எங்குநான் இனிச்செல்லலோ
ஏகபேதகா   இனியசாதகா
வேதநாயகா   விமலதாயகா (என்னை)



45—இராகம்-சைந்தவி-திரிபுடை-தாளம்.

பல்லவி.

ஏழைக்கிரங்க ஒண்ணாதா-இந்த-ஏழை.

அநுபல்லவி.

ஆழக்கடல்உலகை ஆளும்விநோதா   ஏழை

சரணங்கள்.

1. சாடும்பிரசண்டக் காற்றிலே-திசை
தப்பியே அலைபடும் கப்பலைப்போலே
நாடும்பிரபஞ்சமாலே-என்னை
நைவிக்கவாடினேன் னுன்புவிமேலே.   ஏழை

2. நீசெய்வதெல்லாம் சகாயம் இங்கே
நிரந்தரம்என்செய்கை யாவும்அன்னியாயம்
ஈசனேநின்பத நேயம்-எனக்
கெள்ளளவுமில்லை ஈதென்னமாயம்

3. அற்பசுகத்துக் குழைத்தேன்பாரில்
அனுதினம்ஆயிரம் பொய்சொல்லிப்பிழைத்தேன்
பற்பலதீவினை இழைத்தேன் துன்பம்
பாரம்பொறுமலே பரிந்துன்னை அழைத்தேன்   ஏழை

4. ஆன்மபத்தினி மணவாளா அகி
லாண்டபிரமாண்ட அகண்டகோளா
வான்மகழ் தீனதயாளா தினம்
மகிழ்வேதநாயகன் வணங்கும்பொற்றுளா   ஏழை

—(*)—

## 46-இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

### பல்லவி.

கருணைகாப்பாரொருவரோ—அடியனைக்
கண்பார்த்தருள்வையே கருணை

### அநுபல்லவி.

இருணசமுஞ்செயும் இரவிசமான
தெருணுடைய தேஜோமயமான கருணை

### சரணங்கள்.

1. தோன்றினநாள்முதல் சுகுணமொன்றறியேன்
சொப்பனந்தன்னிலுந் துர்க்குணம்பிரியேன்
ஈன்றவநீயென என்றுமேகுறியேன்
என்னசெய்வாயோ வென்றேங்கினன்சிறியேன் கருணை

2. தரணியில்நானொரு தருவெனமுளைத்தேன்
தமகுணம்யாவுமே சாகையாக்கிளைத்தேன்
கருமமாகியவிஷக் கனிகளைவிளைத்தேன்
கண்டனைசெய்வை யென்றஞ்சியகளைத்தேன் கருணை

3. நிகிலலோகங்கட் செல்வப்பிரியதிகாரி
நிச்சயமாயென் மனம்நினக்கொருபகாரி
அகிலந்தனிலே அந்தமனம் அகங்காரி
அடக்கியாளாவிட்டால் அழியாளோநாரி கருணை

4. அழகுக்காலயமான அமிர்தசுந்தரமே
அன்பருக்கருண்மழை பொழியுங்கந்தரமே
தொழுதிடும்வேதநாயகன் சுதந்தரமே
துணைநீஉனை நம்பினேனிரந்தரமே கருணை

---

## ௪௭-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

### பல்லவி.

ஏனின்னம் தாமதமையா
என்னிடம்வர ஏனின்

### அநுபல்லவி.

தானேஉமக்குமுத்தித் தலமொன்றுமில்லையா
தானமுத்தரைவிட்டு வரமனமில்லையா ஏனின்

சரணங்கள்.

1. சூரியனைத்தூண்ட அகன்றீரோ—அந்தச்
சோமனுக்கொளிதரச் சென்றீரோ
பாரினைப்புரட்டியே நின்றீரோ—அதில்
பகல்இரவுண்டாக்க முயன்றீரோ
காரிலிருந்து கனமழைசொரிந்தீரோ
கற்பகத்தில்சிசுக்களையே புரிந்தீரோ
சாரும்பல்லுயிர்க்குயிராய் விரிந்தீரோ
சர்வலோககாரியஞ் செய்துதிரிந்தீரோ-ஏனின்

2. அண்டகோடிகளைத் தூக்கினீரோ-நவம்
ஆகச்சில அண்டம் ஆக்கினீரோ
கண்டகர்உலகை நீக்கினீரோ-கடல்
கரையைக்கடவாமல் தேக்கினீரோ
அண்டும் பல்லுயிர்க்கமு தூட்டுகின்றீரோ
ஐம்பூதங்கட்கும் வேலைகாட்டுகின்றீரோ
மண்டுங்கனிக்குச் சுவைகூட்டுகின்றீரோ
மலருக்குபலவண்ணந் தீட்டுகின்றீரோ—ஏனின்

3. மரஞ்செடிபயிர்கள் நிறைத்தீரோ—அவை
வளரவேதண்ணீரை இறைத்தீரோ
சுரர்கள் இசைகேட்டுக் களித்தீரோ-நல்ல
தொண்டர் இதயத்தில் ஒளித்தீரோ
பரமகிருபாகர பரஹிதநேசரே
பரமதகண்டன பாபவிநாசரே
சருவவிநோத சராசரவாசரே
தாசன்வேதநாயகன் தன்பிராணேசரே-ஏனின்



48—இராகம் மத்தியமாவதி-ரூபகதாளம்.

பல்லவி.

இவளவுதான்ஐயனே அதிகம்அல்ல
இரங்கியருள்மெய்யனே ..

அநுபல்லவி.

அவனியில்வரும் மூவாசையைப்பரிகரி
எவளவுமே துன்பம் இல்லாமல்ஆதரி ..
இதயமலர்தரி விதரணமதுபிரி :
நிதமும்அருள்புரி இதுவேசரிசரி இவளவு ..

சரணங்கள்.

1. எனை எந்நாளும் நீ நீங்காதே நான்போம்
இடமெங்குங்கூடவாயின் வாங்காதே
வினையினென்றென்மேற்கோபம் வீங்காதேமன
வேதைசுமக்கஎன்றால் தாங்காதே
நினைவிலும்நினைநான் நினையாமற்பார்த்திரு
நித்திரைசெயும்போதென் பக்கத்தில்காத்திரு
நெடியவினைபெரு கொடியபிழைபொறு
அடியன்மனமுறு கடியதுயர்அறு — இவளவு

2. மாயையில்மனம்புக ஒட்டாதேஎன்னை
வஞ்சனைக்காளென்று சுட்டாதே
ஆயிரம்தண்டம் என்சொல்தட்டாதேஉன
தனுக்கிரகமின்றி நலங்கிட்டாதே
நாயேன்விரும்பிய நல்லவரங்கள்கொடு
நரகையடைத்துமோக்ஷ நாட்டைத்திறந்துவிடு
நனவுகொடுகொடு சினமும்விடுவிடு
தினமுமகிழ்வொடு கனசுகுணம்இடு — இவளவு

3. நலமன்றிக்குறையை ஆராயாதேபெரு
நன்மைகள்கொடுப்பதில்ஓயாதே
பலவேலைவிட்டேனென்று காயாதேஅற்பப்
பாக்கியம்நான்கேட்கினும் ஏசாதே
புலனில்வேதநாயகன் புகழுங்குணசீலா
பூதபவிஷ்யவர்த்தமானமெனுந்திரிகாலா
போதமழைபொழி-மாதர்மயலழி
பாதகமொழி-ஏதமறவிழி — இவளவு



## 49 இராகம்-சாரங்கா அடதாளசாப்பு.

பல்லவி.

ஆதரித்திட நல்ல தருணம்என
தையாவுனக் கனந்தஞ்சரணம்

அநுபல்லவி.

பாதகநாசனே-பரமகிருபாசனே
சாதகமோசனே தர்மப்பிரயோசனே

சரணங்கள்.

1. என்பழிமறைப்பதில் யானையதப்பாதாளம்
இதரர்பழிதூற்றலில் என்வாய் பெரியமேளம்
அன்பின்மனப்பேராசை அம்புலியினும்நீளம்
அண்டம்வசமானாலும் அடங்காப்பெரும்வேதாளம்
ஆட்டிமயல்வலை-பூட்டு அநுதினம்
கோட்டிசெயும்வினை-ஓட்டி அடியனை (ஆதரி)

2. ஓடிஅலையநெஞ்சுக் குலைசமுப் வானும்அற்பம்
உன்னிடம்வரவென்றால் ஒழியாதஅசந்தர்ப்பம்
தேடிநற்கருமங்கள் செய்ய துங்கஜகர்ப்பம்
தீவினைசெய்வதே என்சித்தனையின் சங்கற்பம்
திருத்தமுடனே என் கருத்துநலமிசைப்
பொருத்தமுறச்செய்து வருத்தந்தொலைத்தெனை (ஆதரி)

3. என்குறைகாணவென்றால் என்னிருகண்ணும்ஊனம்
இதரர்பிழைக்காணக்கண் இரவிகோடிசமானம்
வன்கண்மொழிகளுக்கென் வாயேமுக்கியஸ்தானம்
மதுரச்சொல்பேசவென்றால் மாறாததீர்க்கமோனம்
வாதமொடுபல பூதகாரண
வேதநாயக நீதமேனெனை (ஆதரி)

---

50-இராகம்-நாதநாமக்கிரியை-திரிபுடை-தாளம்.

பல்லவி.

உன்னைநம்பினேன் ஐயனே-எனையாதரி

அநுபல்லவி.

உன்னைநம்பியஏழை தன்னைமுகம்பாராமல்
அன்னைபிதாவேநீ கைவிடலாமா
நான் கெடலாமா
துன்பப் படலாமா உன்னை

சரணங்கள்.

1. தனமுமின்னார்கள்பு வனமும்உலகவாழ்வின்
கனமும்வேண்டிலன் இது தேராயோ
தினமும்உனைக்கருது மனமும்உனதுதரி
சனமும்வேண்டினன் அருள்கூராயோ
மருள் தீராயோ
பொருள் தாராயோ (உன்னை).

2. படிமீதினில்எண்ண முடியாஉ கவிகள்
அடியேனுறச்செய்த பெரியானே
கொடியேன்உனை அனை கொடியாகிலுந்தொழும்
படியே அருள்கலம் பிரியானே
  தூயர்க் குரியானே
  தீயர்க் கரியானே (உன்னை)

3. அயமேபெருங்கல்லின் மயமேயெனும்இரு
நயமேவெழுகென உருகாதோ
ஸ்வயமேபாமாதி சயமேவேதநாயகன்
நயமேவினைதெய்வம் பருகாதோ
  துன்பு கருகாதோ
  இன்பு பெருகாதோ (உன்னை)



51-இராகம்-பந்துவாளி-ரூபகதாளம்.

பல்லவி.

கடைக்கண்ணால் எனைப்பாராய்உன
நடைக்கலம் வினைதீராய் (கடைக்)

அநுபல்லவி.

கிடைக்கொண்ணாய் பதந்தாராய்நலம்
படைக்கவே அருள்கூறாய் அருட்
கொடைக்குநன்னனவே யவதரித்த
கோலாகல-மூலா-அனு கூலாகுண-சீலா-சிதம் (கடைக்)

சரணங்கள்.

1. வஞ்சகமாயையில் ஆழ்ந்தேன்-ஒரு
தஞ்சமென் றுன்னடி தாழ்ந்தேன்
அஞ்சலென்றெனை ஆதரிக்காளுவாய்
ஐயாமிகு-பொய்யாமனம்-நையாதருள்-மெய்யா-ஒரு (கடைக்)

2. ஐயனைதீரா வெவ்பாபம் அருள்
செய்யஉனக் கென்னலோபம்
வையகமாதி வளர் அண்டம்யாவினும்
வாசாபுவ-கேசாமற-நாசாபிர-காசா-ஒரு (கடைக்)

அஞ்சலெனில் உன்வாய் நோமோ ஏழை
நெஞ்சம்வருந்திட லாமோ
பஞ்சமோகைப்பொருள் கொஞ்சமோ பூபரி
பாலா அநுகூலா-ஒரு-மேலாமுதல்-நூலா-ஒரு (கடைக்)

இத்தரைமீதினில் நீயே நல்ல
பத்தரைக்கார்க்கவர் தாயே
சித்தமுவந்தென்னை நித்தமும் ஆளொளிர்
தேகா-கன-யோகா-அதி-தியாகா-தனி-ஏகாருளிர் (கடைக்)

பூதலம்போற்றும்பொற் பாதா அரு
மாதவஞானப்பிர சாதா
வேதநாயகன்பாடுந் தமிழ்க்கருள்
வேதா-உயர்-நீதாகன-தாதாநய-போதா-உன் (கடைக்)



52-இராகம்-அசாவேரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

பாசத்தால் மனம்வாடினேன்-உந்தன்
வாசத்தாள் மலர்சூடினேன்

அநுபல்லவி.

நேசத்தோர்கள்கை வல்லியமே உயர்
நிர்மலா நித்த துல்லியமே கன
மாசற்றோங்கும் பிரபல்லியமே ஜெகம்
மகிழும்பக்தவாற் சல்லியமே மல (பாசத்)

சரணங்கள்.

நினைவிலேன் பிழையாவுமே என்னை
நினைக்குந்தானென்ன சாத்தியமா
எனைவருத்தும் இந்திரியப்பேய்தனக்
கித்தனை ஆகாத்தியமா
வினை எனக்கு விரோதியா என்றும்
விலகிடாக்கர்ம வியாதியா கொடு
மனமுமே பிரதிவாதியா கெட்ட
மாயை என்ன தாயாதியா ஐயா (பாசத்)

2, இருதலைக்கொள்ளி எறும்புபோலெனக்
கிடைவிடாமனை வாட்டமே
மருவும்பந்தப்பசாசு தன்னோடு
மாறிடாத போராட்டமே
கருமமமாயா விகாரமே செய்யும்
கலகஜாலம் விஸ்தாரமே நல்ல
தருமம் எனக்குத் தூரமே பின்னும்
தப்புகள்கற்பக பாரமேஐயா (பாசத்)

3. வளர்கல்வியாணத்தில் தாலிபூட்டிட
மறக்குமூடர்கள் போலவே
தளர்பிரபஞ்சவியாபாரத்தால் உந்தன்
தாள்மறந்தனன் சாலவே
உளவியாதிக்கா ரோக்கியமே நிதம்
உன்னுவோர்கள் மனோக்கியமே நல்ல
விளையமாமறை வாக்கியமே
வேதநாயகன் பாக்கியமே பக்த (பாசத்)

---

53-இராகம்-கன்னடகௌளை-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா-ஞான-ஜோதிதர ஒண்ணுதா

அநுபல்லவி.

பூதலம்பரவும் விநோதனேகன அ
நீதமாய் இருள் பேதமாகவே (ஆதி)

சரணங்கள்.

1. காமக்குரோதமதம் லோபம் அகங்
காரம்பொய்மாற்சரியங் கோபம் இன்னும்
பூமியிற்பலபல பாபம் செய்யும்
புல்லன்மனம் அவித்பா ரூபம் நல்ல (ஆதி)

2. பெண்டுபிள்ளைகள் சமுசாரம் முதற்
பேசும்லௌகிக வியாபாரம் தன்னில்
மண்டுமேமோகாந்த காரம் துயர்
மாற்றியருள்வை நிர்விகாரம்-நல்ல (ஆதி)

3. பாவக்கடல்கடக்கும்  கலமே தொண்டப்
பயிர்கள்வளருந்தெய்வ நிலமே கன
நாவலர்போற்றிடும் நிர்மலமே வேத
நாயகாநானுன் அடைக்கலமே-நல்ல (ஆதி)

—※—

51-இராகம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய் எனக்
கெந்தவரங்களு மில்லையென்றாலும் (இந்த)

அநுபல்லவி.

சுந்தரமாகத் துலங்குந்தெய்விகனே
சந்ததமும்புவி தாங்கும்நிர்வாகனே (இந்த)

சரணங்கள்.

1. காயநிமித்தங் கலங்கி கையாமல்
கண்டவர்க்கெல்லாம்நான்தொண்டு செய்யாமல்
மாயாபிரபஞ்சத்தில் மாட்டி வையாமல்
மாதர்கண்ணம்பென் மனதில் தையாமல் (இந்த)

2. எங்கெங்குமேஉன் னுருவாய் மின்ன
எண்ணம்வேறின்றி உனைமனை முன்ன
மங்களநாமமென் வாய்நிதம் பன்ன
வார்த்தைகள்யாவுமுன் வார்த்தையாய் மன்ன (இந்த)

3. சுத்தசைதன்னிய நிலைமையில் சார
தோஷகர்மானுபவ தங்களுந் தீர
அத்தனேநித்த முனக்கன்பு கூர
ஆனந்தவீட்டிலே நான்வந்து சேர (இந்த)

4. சூதுபொறாமைபொய் கோபமில்லாமல்
சோரமுலோபத்துன் மார்க்கங்கல்லாமல்
வேதநெறியை விலகியில்லாமல்
வேதநாயகா விளம்பஞ்சொல்லாமல் (இந்த)

55-இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

பல்லவி.

ஏகபராபரனே-கருணைப்பிர
வாகமனோகரனே.

அநுபல்லவி.

தேகமுதம்பல மோகஉபாதிகள்
ஏகஎனக்கு விவேகமருந்தருள் (ஏக)

சரணங்கள்.

1. சஞ்சலமானேனே-மனம்நொந்து
தளர்ந்துபோனேனே
அஞ்சலெனத்தானே-அடியேனை
ஆண்டருள்வாய்கோனே
பஞ்சபூதாதிபிரபஞ்சமெலாஞ்செய்து
தஞ்சம்செயும்ஸிஷ்டிர பஞ்சப்பொருளான (ஏக)

2. சங்கடமாற்றாயோ-எளியேன்
தன்முனந்தோற்றாயோ
இங்கிதஞ்சாற்றாயோ-தமியனை
யேகரையேற்றாயோ
அங்குமிங்கும்புவி-எங்கும் உயிரெனத்
தங்கும்படி அருள்-பொங்குங்குணாகர (ஏக)

3. நேயர்சகாயனே-அருமறை
நீதிசொல்வாயனே
தூயவியாகனே-அமரர்கள்
சூழ்சமுதாயனே
மாயவியாதி-நோயணுகாமலே
தாயெனவேவேத நாயகனேஆளும் (ஏக)

——(❋)——

56-இராகம்-எதுகுலகாம்போதி ஆதிதாளம்.

பல்லவி.

கருணைகடாக்ஷந் செய்வாயே சுவாமி

அநுபல்லவி.

மருணைசமாகவே மகிழ்வாகநீயே (கருணை)

சரணங்கள்.

1. அநியாயம் உலகவிர்த்தாந்தம்-இதில்
அறியாதவண்ணம்மீ அருள்வைஉபசாந்தம்
தனிஉன்றனோடு மோகாந்தம்-கொள்ள
சார்வதாகாலமு மௌனதுசித்தாந்தம் (கருணை)

2. நாமரூபகமாம் பிரபஞ்சம்-ஆன்ம
நன்மையைஅழிக்கும் எந்நாளும்இதுநஞ்சம்
காமவிஷயாதிகளில் நெஞ்சம்-நாளும்
கலங்கினேனின்பாத கமலமேதஞ்சம் (கருணை)

3. போதாந்தமிலைமை யுறவேதவே-நல்ல
புவனகோடிகள்செய் தனிக்கின்றகோவே
வேதாந்தாச மொழுகுகாவே-நிதம்
வேதநாயகன்இதய வண்வெளர்பூவே (கருணை)

---

57-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா-நல்ல
அற்புதநற்பதம்பெறப் பொற்பதம்எனக்கருள்செய்

அநுபல்லவி.

ஓதரும்உயிர்க்குயி ராகியெங்கும்நிறையும்
பூதசராசரப் பொருள்களெல்லாம்உறையும் (ஆதி)

சரணங்கள்.

1. ஜீவன்பிழைக்கும்வழி அறியேனே-நான்
தெற்குவடக்கறியாச் சிறியேனே
பாவலகரிகொண்ட வெறியேனே-பந்த
பாசக்கணையைவெட்டி எறியேனே
ஆவலுடனேஎங்கும் அலைந்தகம்வெம்பினேன்
தேவநாயகனே உன்திருவடிநம்பினேன் (ஆதி)

2. ஐயனேஎனக்கருள் ஊட்டாயோ-கெட்ட
அகங்காரமெனும்பேயை ஓட்டாயோ
உய்யவழியெனக்குக் காட்டாயோ-எந்தன்
உள்ளத்தில்உன்பதத்தை நாட்டாயோ
பொய்யுலகநடையைப் பொருளெனநாடினேன்
மெய்யறிவில்லாமலே மிகமிகவாடினேன் (ஆதி)

3. அண்டங்கள்படைத்தளித் தழிப்போனே-கணம்
ஆகப்பலகோடிகாலங் கழிப்போனே
தொண்டர்மனத்துயரம் ஒழிப்போனே-நல்ல
சுகமுத்தரோடுகூடிச் செழிப்போனே
அண்டும்வேதநாயகன் அகத்தொளிர்ஜோதியே
மண்டும்வினைகளெல்லாம் மாற்றுதல்நீதியே (ஆதி)

58-இராகம் பரசு-அடதாளம்-சாப்பு.

பல்லவி.

ஜெகநாதா-வினை-அகலாதா

அநுபல்லவி.

பகலோனென அரும் பலஇருள்நீக்கும் (ஜெக)

சரணங்கள்.

1. பரிதாபம்பரிதாபம் ஐயாஎன்னிலைமை
பஞ்சபுலாதியர்க் கார்தந்தார்தலைமை
தரைமிசைஎன்செய்கை யாவுமேபுலைமை
தந்தருளினிஞான சாஸ்திரப்புலமை (ஜெக)

2. அநுகூலசத்துரு வாகுமென் னுள்ளம்
அநுதினஞ்செய்வதெல்லாம் பெருங்கள்ளம்
திணமுமேபடிந்திடுந் தீவினைப்பள்ளம்
தீர்த்தெனையாட்டுவை திருவருள்வெள்ளம் (ஜெக)

3. ஈசனேஅறநெறி எனக்கென் றும்விலக்கம்
என்பிழைகளெண்ண இல்லையேஇலக்கம்
கூசியேநான்மிகக் கொண்டேன்கலக்கம்
குணவேதநாயகா கொடுத்தருள்துலக்கம் (ஜெக)

56-இராகம்-மத்தியமாவதி-திரிபுடைதாளம்.

பல்லவி.

இரக்கஞ்செய்வாயோ-ஐயாஎன்மேல்

அநுபல்லவி.

இரக்கஞ்செய்வாயோ புரக்குமென்தாயே
ஏகமாகிய-யோகபூரண-பாகமேபெற-மோகமேஅற இரக்

1. தேகநித்தம் செய்வதனர்த்தம்
ஏகப்பிரசித்தம் ஏங்கினேன்சித்தம்
இன்பமேவிய வின்பதாம்புய
அன்புதங்கிடத்துன்பமங்கிட இரக்

2. நாணொருமுடன் நாயினுங்கேடன்
நாணர்கள்சிடன் என்றும்பொய்வேடன்
ஈனமும்அவ மானமுங்கெட
ஞானமுங்கன மோனமுந்தொட இரக்

3. உலகவியாபாரம் ஓயாவிசாரம்
கலகம்அபாரம் கர்மம்விசாரம்
கஷ்டமுங்கன நஷ்டமும்பெறு
துஷ்டனானுன திஷ்டனாகவே இரக்

4. தாசர்கள்நேசா தர்மவிலாசா
பாசாவிநாசா பாக்கியப்பிரதேசா
பாதமேதொழும் வேதநாயகன்
மீதருள்மறவாதநாதனே இரக்

---

60-இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

பரனேபக்தசுதந்-தரனேநாளும்
பக்ஷம்வைத்தென்னைசம்-ரக்ஷணைசெய்தருள்

அநுபல்லவி.

இரவிகோடியென ஒளிவீசிடும்
ஏகஅநேகவைபோகநிர்தேகதற் பர

சரணங்கள்.

1. உன்னையல்லாலகதி பின்னையிலையென்
றுனக்குத்தெரியாதா நாளும்
உற்றதன்பிள்ளையைப் பெற்றதாய்தன்னின்
உலகஞ்சி யாதா மோகம்
தன்னைப்பயிர்வேண்டு முன்னேஅருமழை
தானேசொரியாதா அந்தத்
தன்மைபோல்நீஉயர் நன்மையுதவிலென்
தாபம் மரியாதா

இந்திலபீதிலிலென்னைப் போலோர்ஜடன்
இல்லையெனைப்பங்கிளிச் சொல்லையற்றருடன்
மன்னிமோகக்கடல் தன்னில்விழும்விடன்
மாளுமுன்றுளும் வந்தாளுவதுன்கடன்

2. நீவிய அண்டங்கள் மேவியாகாயத்தில்
நிற்கச்செய்வதாய்நீயே எந்தன்
நெஞ்சமுடன்காளினைக் கஞ்சப்பதிந்திட
நீவரந்தவாயே உனக்
கோவியமோஇது காவியங்கொள்ளரும்
உத்தமனர்தாயே எனக்
குன்னைத்தருமட்டும் பின்னைஅலட்டா
தொழியுமோ என்வாயே
தீவினைநாசனெனப் புகழ்மாலையே
சேர்ந்தஉனக்கென்ன சாந்தர்கண்வேலையே
பாவியென்பாலுண்டு வேலைபல்காலையே
பட்டேன்பொம்விட்டேன் கும்பிட்டேன்உன்காலையே பர

3. தீதகலும்பஞ்ச பூதம்வளர்சர்வ
சாதகபூமியே வினை
தீர்ந்திடவேஞானக் காந்திசொரியுந்
சர்வாந்தரியாமியே என்றும்
வேதநாயகன்மீ தருள்மறவாத
ஸ்வாமியே உண்மை
விளங்கவேபுல வளங்கள்காருப்பிஷ்
களங்க நேமியே
போதனைநீக்காயென் பாதகவெட்டையே
பொய்யுருவாகிய மெய்யெனுங்கட்டையே
நாதனைநீங்குமுன் சாதகநிஷ்டையே
நண்ணிடப்பண்ணுவாய் புண்ணியப்பிரதிஷ்டையே பர

---

61-இராகதாளம்-யதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்பராமுகம்-ஏதோஎன்றன்
முன்னம் வந்தாள ஒண்ணாதோ

அநுபல்லவி.

தன்னவரைரக்ஷிக்கத் தானேதங்கணமே
தரித்தவனேஎனை ஆதரித்தல்வங்கணமே இன்னம்

சரணங்கள்.

1. யார்க்கோசொல்வதுபோல் நீ அசட்டை-செய்யில்
எப்படித்துலைப்பேன் என்கன்மக்கட்டை
மார்க்கமூடனே நீ மெஞ்ஞானநிஷ்டை-தரும்
மட்டும்நான்விடுவனோ என் அலட்டை
மூர்க்கவினைகளுக்கு நானொருபையோ
மூடமனமுமாயையும் ஒருநகையோ
தீர்க்கமாகஉனைநான் அடுத்ததுபொய்யோ
தெய்வமேநீகைவிடில் என்செய்வேன்ஐயோ (இன்)

2. தீனருக்குதவுவதே தியாகம்-பெருஞ்
செல்வருக்கீவது துர்விநியோகம்
மானமுள்ளோர்க்குன் அருள்பிரவாகம்-பின்னும்
நலம் அவர்க்கீவதில் என்னுடயோகம்
ஈசனுனை எனக்கு ஞானசையோகம்
ஈவதுவேநல்லதி யாகப்பிரயோகம்
நானுஞ்சந்ததி அதிலென்னசந்தேகம்
நான்விடேன்விடேன் பூர்வாஜிதபாகம் (இன்)

3. பிள்ளைக்கும்தாய்க்கும் உண்டோபிணக்கு-மிகப்
பெருகுமஉன்கருணைக் குண்டோகணக்கு
கள்ளமயலுறு மென்மனக்குணக்கு
கணங்கொள்நன்மார்க்கத்தில் எனை இணக்கு
தள்ளரிதாகிய பரமசத்துவமே
சாக்ஷாதுலகெங்கும் விளங்குந்தத்துவமே
விள்ளரிதாகிய சர்வஞ்ஞத்துவமே
வேதநாயகன் தனக்குரியசொத்துவமே (இன்)



62-இராகம்-அடதாளசாப்பு.

பல்லவி.

வேதநாயகா-நம்பினேன்-உனை

அநுபல்லவி.

ஏதமும்விப ரீதமுங்கெட
நீதமுங்கன போதமுந்தொடு (வேத)

சரணங்கள்.

1. தினமும்உன்பணி விடையே-நான்மறவாமல்
செயஅருள் நன்னடையே
இனமாகும் அருட்கொடையே-வழங்கிட
வனின்னமுந் தடையே
கனமுமேலவர் இனமும்நிர்மல
மனமும்உன் தரி சனமுமேயருள் (வேத)

2. பொய்வளர்மெய்க் கும்பமே-உடையமுன்
போதிபுண்ணி யாரம்பமே
தெய்வமி ராலம்பமே-என்கவிகளைச்
செவிகொண்டு சிரக்கம்பமே
செய்குவாயுளம் வைகுவாயருள்
பெய்குவாய்வினை எய்குவாயுயர் (வேத)

3. தயைசெய்யிற் பொல்லாங்கா-எந்தனையாளத்
தாமதஞ்செயல் பாங்கா
பயன்உதவிடில் தீங்கா-வேதநாயகன்
பரவுங்குண தராங்கா
நயமும்ஆணவஜெயமும்நாளும்அ
பயமும்பாதபங்கயமுமேயருள் (வேத)

---

63-இராகம்-ஆகிரி-ரூபகதாளம்.

பல்லவி.

நாதனே தயைபுரிவாய்-எனக்குமெய்ப்
போதமா-மழைசொரிவாய்

அநுபல்லவி.

நீதகல்பரம்பர திவ்யகுணடம்பர
ஓதருஞ்சுயம்வர உலகமுடன்அம்பர (நாத)

சரணங்கள்.

1. நண்ணிநல்வினைகளைப் பண்ணியறிகிலாத
நான்நரன்போலியா இந்த
மண்ணின்மிசைஎனக்கும் புண்ணியமென்பதற்கும்
எண்ணமெல்லாங் கறுப்பே
எனக்குன் னடிவெறுப்பே
பண்ணுமே தீமறுப்பே
பரிந்தாள்வ துன்பொறுப்பே (நாதா)

2. என்பாட்டில்இரங்காமல் உன்பாட்டில்நீசும்மா
இருந்திடில்அதுதருமா என்றும்
தன்பாட்டில்மகிழ்ந்தோனே இன்பூட்டுங்கதியுந்தன்
தயையின்றிக்கைபுகுமா எந்தன்
அனைவெல்லாம் வெறும்பேச்சே
அறமென்பதுமேற் பூச்சே
துன்பப்பிரளயம் நீச்சே
தொல்புவி எங்கும்வச்சே

3. தினையளவும்நன்னெறி தனையறியாதநான்
தீவினைக்கேயிலக்கா பாரில்
வினையன்றிமற்றெவையும்வினையும்என்னெஞ்சுக்கு
நீமாத்திரம்விலக்கா நன்மை
புனையும்நீதிப்பிரமாண
புவனகோடிநிர்மாண
விசயநித் யகல்யாண
வேதநாயகன்பிராண (நாத)

64-இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

தஞ்சம்நீயே-தயைபுரிவாயே-தஞ்சம்

அநுபல்லவி.

அஞ்சலென்றேதினம் ஆளும்எந்தாயே (தஞ்)

சரணங்கள்.

1. தினமனவேதை சேர்ந்தநான்பேதை
உனதடிப்போதை உறஅருள்பாதை (தஞ்)

2. பாதகபஞ்சன பண்டிதரஞ்சன
போதகசஞ்சன புண்ணியநிரஞ்சன (தஞ்)

3. தருமசிங்காரா சருவசங்காரா
வரும்வேதநாயகன் மனஅலங்காரா (தஞ்)

## 65-இராகம்-பரசு-ஆதிதாளம்.

### பல்லவி.

நீயேகதியெனக்குன் அருள்கூரே தந்தை
தாயேயினை அல்லது துணையாயே

### அநுபல்லவி.

தூயகருணைமழை சொரிகாரே
சொலஅரு-நலமுறு-தலமிசை-நிலவென
மலஇருள்-செலஅருள்-அலரும்உதாரா (நீயே)

### சரணங்கள்.

1. முத்தியென்பதெவர்க்குஞ் சமுதாயம் அது
முத்தர்மட்டுக்குமென்ப தென்னஞாயம்
நித்தியனேவிடுவனோ என்தாயம் நீ
நீதியின்படிசெய்குவாய் விதாயம்
சத்தியனேவதோ உன்அபிப்பிராயம்
தகவென-தகமிசை-மிகமதி-புகஅரும்
இகபர-சுகமருள்-அகல்ஜகநாதா (நீயே)

2. வாழ்மனை தத்திடில் வேண்டாமே என்று
மாநிலத்துண்டோ மறுப்பவர்தாமே
ஆழுவேநீயெனது மனப்பூமேல் சூடி
ஆகிடின்உனக்கென்ன குறைவாமே
சூழநீகுடியுறில் வினைபோமே
துதிபுரி-விதியினர்-சதியெனும்-நிதிபெற
அதிதயை பதிவுறும்-அதிசயயோகா (நீயே)

3. சாதகனேஎன்துயர் தெரியாயோ நல்ல
சர்வாந்தர்யாமியெனும் பெரியாயோ
பாதகம்அறஅருள் புரியாயோ பரி
பக்குவஞானமழை சொரியாயோ
வேதநாயகன் மனந்தரியாயோ
மிடலுறு-சுடரவன்-உடுபதி-தடவரை
கடவிட-முடன்இடர்-கெட-அடர்-தேவா. (நீயே)

66-இராகம்-பூபாளம்-ரூபகதாளம்.

பல்லவி.

தேவாதிதேவே திருவருள்
செய்தென்னை-நீகாவே.

அநுபல்லவி.

ஜீவசம்ரக்ஷணை செய்யுங்கிருபாநிதியே
தினந்துஷ்டர்கள் இனஞ்சுட்டவர்
முனஞ்சிஷ்டர்கள் இனஞ்சுட்டவர் (தேவா)

சரணங்கள்.

1. பாழுமனமேசுத்த பாஷாணம்-பெரும்
பாவமென்றால் அதற்றுக்கலியாணம்
வாழும்இந்நாளொழிந்து பிரியாணம்-கிட்டி
வருமுன்னம்அருள் புண்ணியப்பிரமாணம்
ஏழையென்செய்கையுன்னில்எனக்குமேவரும்நாணம்
இழைக்குஞ்சுகம் அழைக்குந்தகை
தழைக்கும்படி பிழைக்கும்படி (தேவா)

2. அருள்செய்யின் அலதுன்னைவிடுவேனோ-உனை
அன்றிமற்றோரைக் கும்பிடுவேனோ
மருவுமயலிற்சிக்கிக் கெடுவேனோ-உன்பால்
வழக்கிட்டிரக்கப்பயப் படுவேனோ
மருள்செய்யும்பொருளைநீ வழங்கினுந்தொடுவேனோ
மனந்தந்திடும் அனந்தத்துயர்
முனஞ்சிந்திடு கனந்தங்கிட (தேவா)

3. சிஷ்டபாலகங்கண தாரணனே-பெரும்
தியபசாசகண மாரணனே
துஷ்டகண்டன் மந்திரோச்சாரணனே-நாளும்
சுயம்பிரகாச நிஷ்காரணனே
இஷ்டன்வேதநாயகன் ஏதநிவாரணனே
இணங்கண்டர்கள் கணங்கண்டடி
வணங்கும்படி குணங்கொண்டுயர் (தேவா)

67-இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏகாதிபனே-அருள்புரி-யோகாதிகரனே

அநுபல்லவி.

ஆசாரியமுறும் மகாமியம்அறும்
அகணிதசிற்பர அதிகுணதற்பர
இகபரநற்பத இணையறும்அற்புத (ஏகாதி)

சரணங்கள்.

1. பழிக்குநான்குருபீடம் பத்தனைப்போல்நான்
தரிப்பது வெளிவேடம்
அழிக்கும்பொய்வாய்பாடம் கொடுமைமாயைக்கென்
அகமே கடனகூடம்
செழிக்கும்வரங்கள் ஈவாய்
சிந்தையிற்குடி யாவாய்
தினகரசுந்தர திருவளர்மந்தர
அனகநிரந்தர அகிலதுரந்தர (ஏகாதி)

2. படியாக்கொடுகெஞ்சமா ஐயனே அது
படருந்துற்குண புஞ்சமா
அடியேன் துயர்கொஞ்சமா வரப்பிரசாதம்
அருள்உனக்குப் பஞ்சமா
படியெல்லாம் ஈன்றதாயே
பாரில்நற்கதி நீயே
பரமபவித்திர பதிதஉபத்திர
தருமசமுத்திர சகலவிசித்திர (ஏகாதி)

3. சுரசேவிதபாதா மலரகித
சுஜநவற்சலதாதா
வரதாயகநாதா வேதநாயகன்
மனவாலயவியாதா
நரபரிபாலன நயகுணலாலன
நாகரிகத்துவ நாமமகத்துவ
போகபிரபுத்துவ புண்ணியதத்துவ (ஏகாதி)

68 இராகம்-தன்னியாசி-ரூபகதாளம்.

பல்லவி.

நிச்சயம்இதுதானே மதி நீயருள்கோனே

அநுபல்லவி.

நச்சுமரம்போல் நாளும்வளர்ந்தேன்
இச்சகந்தனில் இதயந்தளர்ந்தேன் (நிச்சயம்)

சரணங்கள்.

1. அல்லும்பகலும் பொருளில்ஏக்கம்
அநித்தியசுகங்களே என்னோக்கம்
நல்லவர்சபை எனக்குநீக்கம்
ஞானவழியில் நாளுந்தூக்கம் (நிச்சயம்)

2. துஷ்டர்களுடனே அன்யோன்யம்
துர்க்குணமெல்லாம் சர்வமான்யம்
இஷ்டம்வைப்பது வேதனதான்யம்
ஈசனேஎனக் கறிவுசூன்னியம் (நிச்சயம்)

3. நீதுறும்எனக் குணதுவேதம்
செவிடன்காதில் சங்கநாதம்
வேதநாயகனே உன்பாதம்
விரும்பிவாழ்த நேயமிராதம் (நிச்சயம்)



69-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

கருணாசாகரா கனஉபகாரா
காத்தருள்வாய்கோவே.

அநுபல்லவி.

அருணோதயமென அடியார்க்குக்காட்டும்
ஆத்மகோடிகள் உஜ்ஜீவநஅமுதூட்டும் (கருணா)

சரணங்கள்.

1. நிச்சயஞானமே நினதுஸ்வாதீனம்
நீதராவிடில்எனக் கேதுமெய்ஞ்ஞானம்
அச்சமில்லாமலே அபயப்பிரதானம்
அருள்செய்யேனடியேனுக் கில்லைசமானம் (கருணா)

2. சிஷ்டன்போல்யாவர்க்குந் இவ்வபிரசங்கம்
செய்வதில்லையெனைப் போல்எவர்சிங்கம்
சட்டமாய்நடப்பதே சர்வவில்லங்கம்
சாமிநீஅறியாயோ தமியன்அந்தரங்கம் (கருணை)

3. எத்தனையோசெய்வதேன் உனக்கபராதம்
இதுநிமித்தம்உனக் கென்மேல்விரோதம்
அத்தனைபிழைபொருத் தால்வதேநீதம்
அருள்புரியஇனி வேண்டாம்விகாதம் (கருணை)

4. தலைவன்இல்லாவிடில் தழைக்குமோராஜ்யம்
தரையில்நீயல்லால் சகலமும்பூஜ்யம்
விலகிடாதருள்உயிர் விமலசாம்பிராஜ்யம்
வேதநாயகாஇன்னந் தானென்னவியாஜ்யம் (கருணை)

---

## 70-இராகம்-தோடி-ஏகதாளம்.

பல்லவி.

தயைபுரிய இன்னந்தாமசமோ

அநுபல்லவி.

பயநிவாரணா பாக்கியபூரணா
உயரும்ஆரணா உலககாரணா (தயை)

சரணங்கள்.

1. அத்தனைஒருசா ணாகியகுக்ஷிக்
காகநான்ஊரெல்லாம் அலைந்திடும்பக்ஷி
நித்தமும்பேசுவேன் ஆயிரங்கக்ஷி
நீதிநெறியில்லா னிரக்ஷரகுக்ஷி (தயை)

2. தத்துவஞானத்தைத் தள்ளியேபோட்டேன்
சாமிநான் இந்திரிய வாசலைப்பூட்டேன்
உத்தமம்எனக்கருள் பலதரங்கேட்டேன்
உதவிசெய்யாவிடில் உனைவிடமாட்டேன் (தயை)

2. சர்வவிநோத விசித்திரநிர்மாணா
சாசுவதமங்கள சத்தகல்யாணா
பரமநித்தியாநந்த பாக்கியஉக்கிராணா
பாலவேதநாயக பிரமாணா (தயை)

71-இராகம்-முகாரி-ரூபகதாளம்.

பல்லவி.

காத்தருள்வாய் எனைக்-காத்தருள்வாய்

பல்லவி.

சாஸ்திரம்வேதம் ஸ்தோத்திரமேசெய்யப்
பாத்திரனேதயை நேத்திரனேதினம் (காத்தருள்)

சரணங்கள்.

1. ஆனாலும்என்பாவம் அநியாயம்அநியாயம்
ஞானியைப்போல்நான்காட்டும் நடையேமுழுமாயம்
ஈனமுறுந்தமகுணங்கள் எந்தனுக்கேகந்தாயம்
தீனனென்மேல்நீகோபஞ் செய்யிலென்னஆதாயம் (காத்)

2. மாதாநீஉன்மகனான் மன்னவநீகுடிநானே
தாதாநீயாசகநான் ஸ்வாமிநீஅடியேனே
சாதகஞ்செய்தற்குநீ தமியேன்சீஷன்தானே
ஆதாரமாகஉனை அடுத்துவந்தேன்சுரர்கோனே (காத்)

3. வாக்குமனம்எட்டாத வாசமகோசரனே
பாக்கியபலதான பரிபால்பரமேசுரனே
தேக்குமலவிருள்நாசஞ் செயும்உதயபாஸ்கரனே
ஆக்கும்வேதநாயகனுக் கனுக்கிரகதயாபரனே (காத்)

---

72-இராகம்-தோடி-ரூபகதாளம்.

பல்லவி.

வாவாஜகநாதா வாவாசுகதாதா

அநுபல்லவி.

பாவங்களை நிர்மூலமாகப்
பரமார்த்தகள் கொடுத்துக்காக்க (வாவா)

சரணங்கள்.

1. தர்மாதர்மந் தெரியேன் ஜெப
தபசாதிகள் புரியேன்
கர்மம்அநு சரியேன் உனைக்
கண்டால்இனிப் பிரியேன் (வாவா)

2. எனைநீ விடலாமா பல
இடர்நான் படலாமா
வினையே தொடலாமா ஏழை
வீணே கெடலாமா (வாவா)

3. வர்மஞ்செய்தல் முறையா எந்தன்
வாழ்நாள்வளர் பிறையா
தர்மந்தரிற் குறையா இன்னஞ்
சலஞ்சாதித்தல் பொறையா (வாவா)

4. ஆலோலித முகனே நித்திய
அமலானந்த சுகனே
மேலோர்கள் சமுகனே தயை
மிகும்வேத நாயகனே (வாவா)

---

## 73-இராகம்-சஹாநா-ஆதிதாளம்.

பல்லவி.

கருணைநீசெய்யவேண்டுமேசுவாமி

அநுபல்லவி.

சரணாகதியென உனையடைந்தேனே
சாதகம்வேண்டியே உனைத்தொடர்ந்தேனே (கருணை)

சரணங்கள்.

1. மாயவாழ்வெனும்பெரு வாரிதிச்சுழலே
மாட்டியே அலைபடும் நாளொருவிழலே
காயமாகியசிறு காற்றசைகுழலே
கழியும்போதுநற் கதிமலர்க்கழலே (கருணை)

2. சலத்தையல்லாது தாமரைக்குண்டோநிலையே
தரையில்ஊன்றுப்பயிர் எடுக்குமோதலையே
நிலத்திலேநீயலால் நிலையெனக்கிலையே
நீமுகம்பார்த்தருள் நிரஞ்சனயலையே (கருணை)

3. சந்திரசூரியர்உள்ள மட்டும்வாழ்நாளா
சாவையேஜெயித்திட என்கையில்வாளா
தந்தையேயுனதுசோ தனைக்குநான்ஆளா
சர்வசாதக பரமதயாளா (கருணை)

4. அகணிதகுண அகிலாண்டவிலாசா
அபரிஇதானந்த கரசரமேசா
விகசகிருபாகர விமலப்பிரகாசா
வேதநாயகன் இதயநிவேசா (கருணை)

---

74-இராகம்-ஈசயனோகரி-ரூபகதாளம்.

பல்லவி.

அப்பயம்நீயருளுவாய்-ஆதியே-அநுதினம்

அநுபல்லவி.

உபயபாதம் நம்பினேன் ஓஅநாதியே அநுதினம் (அபய

சரணங்கள்.

1. அலைகடற்சிறிதுரும்புபோல அலைந்துவாடினேன்
உலைமெழுகெனஉள்ளமுருகி உன்னைநாடினேன் தினமும்(அப்ப
2. நீர்க்குமிழியைநிகரும் வாழ்வைநிலையென்றெண்ணினேன்
மூர்க்கமாகக்கொடிய பாவமுழுதும்பண்ணினேன் தினமும்(அ)
3. பாசக்காற்றிற்பஞ்சுபோலப் பறந்துதயங்கினேன்
ஆசைக்கடலில்மூழ்கிமூழ்கி அறிவுமயங்கினேன் தினமும் (அ)
4. ஆண்டவாநீஅடிமைநான்எனை ஆளவொண்ணாதோ
நீண்டவுலகம்வழையென்றெனைநிர்தைபண்ணுதோ தினமும் (அ)
5. புவனரக்ஷணகாரணார்த்தபுருஷவேஷனே
பவவிமோசன வேதநாயகபலவிசேஷனே தினமும் (அப்ப)



75-இராகம்-பியாகடை-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதோசோதனை-இன்னம்என்சாதனை
ஏகாதிபதியே-நீதியேஎளியன்மேல்

அநுபல்லவி.

போதேயசுர பூஜிதபாதா
பூதபேத காரணசுகதாதா (ஏதோ)

சரணங்கள்.

1. தந்தைதாயொடு பலதனையரையெடுத்தாய்
தாரங்கள்மூவர்க்குச் சாசுவதம்கொடுத்தாய்
சொந்தமாகியஉடற் சுகத்தினைக்கெடுத்தாய்
ஸ்வாமிநீயிந்த வாறுகைவிடுத்தாய் (ஏதோ)

2. ஒருகையால்அடிப்பாய் ஒருகையாற்பிடிப்பாய்
உதவியில்லாமலே உன்னெண்ணமுடிப்பாய்
பெருமலைகளையுமே பிடுங்கிப்பந்தடிப்பாய்
பிரம்மாண்டங்களைப் பிளக்கிடஇடிப்பாய் (ஏதோ)

3. துன்பஞ்செய்வதுபோல் சுகங்களைக்கொடுப்பாய்
துஷ்டர்கள்மீதில் எப்போதுங்கையெடுப்பாய்
அன்புள்ளதாயைப்போல் அடியரையடுப்பாய்
அவர்களைத்துயரணு காமலே தடுப்பாய் (ஏதோ)

4. அதுலஅக்ஷயகுரு பாகரவேஷா
அமிர்தவருஷ துல்லியமிருதுபாஷா
விதூரநிர்தோஷ நிர்விகற்பவிசேஷா
வேதநாயகவர நிதகுணபூஷா (ஏதோ)



76. இராகம்தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதுபராமுகம்-ஏழையென்மீது
ஏகனே-யோகனே-மாகனே-தியாகனே

அநுபல்லவி.

வேதபோதக-அநாதரக்ஷணனே
மேகவாகன தெய்விகலக்ஷணனே (ஏது)

சரணங்கள்.

1. அநித்தியசுகந்தந்தாய் அதைநான்கேட்டேனோ
ஆனந்தந்தரில் அநுபவிக்கமாட்டேனோ
இனித்தஉன்பாதத்தில் இதயம்நாட்டேனோ
சணமாமாயையை எதிர்த்துவாட்டேனோ (ஏது)

2. ஐயனே என்னைக் கேளாமல்முன் நீயே
அரியமானிட ஜன்மந்தந்தாயே
வையகமீதுநான் உனக்கொருசேயே
மதியருள்வாய்பெற்று வளர்த்திடுந்தாயே (ஏது)

3. மூர்த்திநீபலருக்குக் காட்டினாயுனையே
முக்தர்க்குமொத்தனை மோக்ஷமாயனையே
பக்தியிலாருமோ ஓரவஞ்சனையே
பக்ஷமாயெனக்கருள் பராசுகந்தனையே (ஏது)

4. அகடிதகடனசா மர்த்தியப்பிரதாடா
அசலகஜநவாழ் சலவியர் ஷ்கோபா
சகலசுலக்ஷண தத்துவசொரூபா
தாசன்வேதநாய கன்மனோதீபா ஏது

---

## 77-இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

ஆரணமயநயபூரணனே
உனதமல அடிசரணம்

அநுபல்லவி.

பாரகோரபரி காரகுணாகர
விரதிரூப காரமனோகர ஆரண

சரணங்கள்.

1. உனை நிதம்நினைவுறும் எனை அடர்வினை அகலாதா-நாதா
உலககலகமயல்விலக இலகருளோநீதா
கனஉலகஜநக அநகநிகரமெய்
காவலா-அடியர் ஆவலாயருள்செய் ஆரண

2. துரிதர்ஹிதகுண சரிதசுகிர்தபரமேசா நேசா
சுஜனபஜனமிர்து வசனரசன இதிகாசா
சாதவரதஅனவரத்விரதுதர
சாபமோசனபிர தாபவிலாசன ஆரண

3. கனககனபுவன பவனகவனபரிபாலா-மூலா
கரணசரணகுண கிரணபரண அநுகூலா
விநயநிலயஸ்வயவிஜயமபய அபய
வேதநாயகன்மனோதய அதிசய ஆரண

78-இராகம்-ரீதிகௌளை-ரூபகதாளம்.

பல்லவி.

சரணஞ்சர்வேசா-சஹிரசக்ஷிக்கத்
தருணமிதுபிரகாசா

அநுபல்லவி.

கருணாலயபரகாயப்பிரவேசா
பரமசுகோதயபாபவிநாசா சரணஞ்

சரணங்கள்.

1. நீயேகுருமூர்த்திஉனக்குச்சிறு
நாயேன்விர்த்தியாத்தி
தாயாஉபதேசஞ் சொல்லிலிஷ்டபூர்த்தி
சுயிற்குருசீஷர் இருவர்க்குங்கீர்த்தி சரண

2. நீதான்பரஞ்சோதி-எனஉலகில்
மீதேபெருங்கியாதி
வேதாமலவிருள்விலக்குதல்நீதி
ஆதாரமாகஉன்னருளைப்பிரசாதி சரணஞ்

3. ஆதிகாரண நாதாபரமஞான
ஜோதிமய அபேதா
பாதகமோசனபாக்கியப்பிரசாதா
நீதவேதநாயகநித்தியசங்கீதா

79-இராகம்-லலிதா-ரூபகதாளம்.

பல்லவி.

இன்னந்தாமசம்ஏது-ஜகநாதா

அநுபல்லவி.

நன்னயமதாக-உனை-நம்பினவனுன் அலவோ இன்னந்

சரணங்கள்.

1. சிலம்அருளிற் செலவோ
சேயுனக்குநான் அலவோ
மேலுமென்னதான் சொலவோ
வேலையுனக்குப் பலவோ இன்னந்

2. சாதுஜன ரக்ஷணனே
தாசர்கள்பிர தக்ஷணனே
கிதாயிர்த பக்ஷணனே
கீர்த்திகொள் லக்ஷணனே இன்னங்

3. ஈசனே நான் உன்னடிமை
எப்பொருளும் உன்னுடைமை
நேசமுடன் என்மடமை
நீக்கிவை தன்கடமை இன்னங்

4. சாதக குணாபரணா
சர்வபுவ நாதரணா
வேதநாயகன் ஸ்மரணா
வேகதுரி தஹரணா இன்னங்



80-இராகம்—கெங்காதரங்கிணி-ஆதிதாளம்.

பல்லவி.

ஊனநானே தொழுவரம் அருள்கோனே
விநயசுஜன சேவிதபெருமானே

அநுபல்லவி.

வேதமுடிவில் நடனம்புரிவோனே (ஊன)

சரணங்கள்.

1. சிந்தைநீதுன்று பாதமேதியானம்
செய்யநீயருள்வாய் திவ்யஞானம்
தந்தைநீயறியுமே சமஸ்தானம்
தனயன் மீதிலேயோ அபிமானம் (ஊன)

2. ஈசனே எனது வார்த்தைகள்பொய்யே
இந்தவார்த்தையொன்று மாத்திரமெய்யே
பாசமூடுமனம் வெயிலுறுநெய்யே
பாவம்நீக்கும்படி தயைசெய்யே (ஊன)

3. அடருமலசலாதிகள் நிறைபேழை
ஆனமாயஉட லாகியபாழை
இடமென்றெண்ணிநிறைப்பேன் அதிற்கூழை
இனஞ்செய்யாதேநான் மிகஏழை (ஊன)

4. சகலலோகம் அடங்காதுயர்காத்ரா
சமமிலாக்கபட நாடகருத்ரா
சுகப்பிரதாயக கிருபாகரநேத்ரா
துதிசெய்வேதநாயகன் மனசேத்ரா (எனை)



81. இராகம்-பூரிகல்யாணி-ரூபகதாளம்

பல்லவி.

கருணாகரமூர்த்திகாப்பதுவேகீர்த்தி

அநுபல்லவி

அருணோதயமாசரீர
அற்புதநராவதார கரு

சரணங்கள்.

1. தேகம்வளர்ப்பதே என்விர்த்தி
தினந்துர்க்குணமே பிரவர்த்தி
ஏகமான சக்கரவர்த்தி
எனக்குநீ அருள் பாபநிவர்த்தி கரு

2. அற்பமானபோக போக்கியம்
அழிந்துபோம் இதுவே சுவாக்கியம்
தற்பரானினைக்காணும் பாக்கியம்
தந்திடில்அதுசர்வ சிலாக்கியம் கரு

3. பாதகந்தனைச்சர்வ நாசம்
பண்ணுவதில்உண்டோ பிரயாசம்
வேதநாயகா விச்னேசம்
விளங்கிட அருள்வாய் பிரகாசம் கரு



82. இராகம்-பரசு திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம்எப்படியோ ஐயாஉன் சித்தம்எப்படியோ

அநுபல்லவி.

உத்தமனைஎன்னை உயர்த்திடுவாயோ
கர்த்தனேநீயென்னைக் கைவிடுவாயோ (சித்

1. அருள்புரிவாயோ அருந்தவப்
பொருள்சொரிவாயோ
தருமவானும்படி தான்தெரிவர்யோ
இருள்மூடும்பாவியென் றெனைப்பிரிவாயோ (சித்)

2. பாதஞ்சேர்ப்பாயோ எந்தன்மனக்
கேதந்தீர்ப்பாயோ
ஆதன்செய்வினை அடியோடேபேர்ப்பாயோ
ஏதுங்கதியில்லாஙென் றிரங்கிப்பார்ப்பாயோ (சித்)

3. வாடிநொந்தேனே மெய்ஞ்ஞானக்கண்
மூடிநைந்தேனே
நாடியாள்வாயென்று நம்பிவந்தேனே
பாடும்வேதநாயகன் பருகுஞ்செந்தேனே (சித்)

---

83-இராகம்-சஹாணு-அடதாளசாப்பு.

பல்லவி.

எப்படியும்பாமே நலம்பெற
ஈந்தருள்வாய்வாமே.

அநுபல்லவி.

செப்பருமாணிக்கதீபசொரூபனே
தேவேமனமேநொந்தேன்-காவேயெனவேவந்தேன் (எப்)

சரணங்கள்.

1. கேவலம்வாடினேன்கேள்விமுறையில்லையோ என்தன்
சீவன்பிழைக்கச்செய்ய வல்லனீயல்லையோ
பாவனுனைப் பண்ணுதல்பாரமோ
பாகேகனியேசத்தே ஓகொதனியேவித்தே (எப்)

2. அற்பன்ஆனாலும் அஅனைக்குப்பிள்ளையல்லவோ
பற்பலவாய்ப்படித்து படித்துச்சொல்லவோ
கற்பகோடிகாலங் கண்டுமுடிவில்லாக்
கண்ணேமணியேபொன்னேவிண்ணே அணியேசொன்னேன்

3. இன்பதுன்பங்கள் இரண்டிற்சமசித்தமே-தந்து
நின்பதசேவையிலேக்கச் செய்வாய்நித்தமே
அன்பன்வேதநாயகன் அகத்தேயணி
ஆணிப்பொருளேமுந்தே காணப்பெறுவோர்சொந்தே(எப்)

---

84-இராகம்-கலியாணி-அடதாளசாப்பு.

பல்லவி.

உன்னையெனக்குக்காட்டையா-காட்டாமல்சும்மா
ஒளித்தென்னவிளையாட்டையா.

அநுபல்லவி.

உன்னைப்பாராமலே தன்பிள்ளைகண்மூடி
தனம்ஊட்டுந்தாயுண்டோ சாமிநீதயைகூடி (உன்னை)

சரணங்கள்.

1. கறவைதனைப்பிரிந்த கன்றுகதறல்போலும்
கணவன்தனைப்பிரிந்து கலங்கும்உத்தமிபோலும்
இறகுகள்பறிகொடுத் தேங்கும்பறவைபோலும்
இருகண்ணுந்தெரியாத ஈனக்குருடர்போலும்
ஏங்கினேன்சுகம்-நீங்கினேன்துயர்
தாங்கினேன்மனம்-வீங்கினேன்-நீ (உன்னை)

2. நினைக்கநினைக்களந்த னெஞ்சமெல்லாம்ருசிக்கும்
நின்னைப்புகழும்வாயே நித்தியாமிர்தம்புசிக்கும்
கலக்கும்நின்னடிகாணக் கண்கள்தினம்பசிக்கும்
கர்த்தனேஉனைக்கண்டாற் கவலையெல்லாம்நசிக்கும்
கனத்திலேனும் ககனத்திமேலனுமென்
மனத்திலேனும்சொப் பனத்திலேனும்-நீ உன்னை

3. விண்மேணைனையல்லாமல் வேறொன்றைத்தொடுவேனோ
மேதினியெங்குந்தேடி வேதனைபடுவேனோ
கண்ணேமணியேயுனைக் கண்டால்நான்விடுவேனோ
கட்டிக்கொண்டானந்தங் கலக்கப்பின்னிடுவேனோ
கருத்தில்முடுவேன்-வருத்தம்போடுவேன்
நிருத்தமாடுவேன்-விருத்தம்பாடுவேன் உன்னை

4. தேவனேஉனைக்கண்டால் திட்டிதோஷந்தொடுமோ
திவ்யதேஜோமயம் என்தேகந்தனைச்சுடுமோ
கூவுங்கோழிமிதித்தாற் குஞ்சுமுடமபடுமோ
கொல்லுஞ்சிங்கமானாலும் குட்டிகள்அஞ்சிடுமோ
கோலனேஅநு-கூலனேபரி
பாலனேகன-மூலனேநீ உன்னை

5. ஆணல்லபெண்ணல்ல ஐம்பூதஞ்சுடரல்ல
அரியயன்சிவனல்ல அதுவல்லஇதுவல்ல
காணருமுன்திவ்ய காந்திவிரியும்நல்ல
கனவடிவினைக்காணக் காதல்கொண்டேன்வல்ல
காரணசுக-பூரணகுண
தாரணகன-ஆரணநீ உன்னை

6. தேனேகனியேதெவிட் டாததெள்ளமிர்தமே
சீனியேகரும்பே தித்திக்கும்இரதமே
வானேபுவியேசுக வாழ்வேபெரும்பதமே
மதிக்கும்வேதநாயகன் மகிழுமனோரதமே
வாடினேன்கவி-பாடினேன்உனை
நாடினேன்தினந்-தேடினேனநீ உன்னை

---

85-இராகம்-பங்களா-ஆதிதாளம்.

பல்லவி.

சஞ்சலமாய்நெஞ்சமிக உடைந்தேனே-இனித்
தஞ்சமெனஉன்சரணம் அடைந்தேனே-ஸ்வாமி.

அநுபல்லவி.

வஞ்சகப்பிர பஞ்சமெனும்
நஞ்சநதிமுழ்கியே (சஞ்)

சரணங்கள்.

1. இட்டவலைபட்டயரும் மான்போலே வெயில்
சுட்டசலம்விட்டகலும் மீன்போலே ஸ்வாமி சஞ்
2. பொய்யுலகைமெய்யெனவே தடுமாறி நாளும்
ஐயகோகோமயலிலனுங் கடுமீறி ஸ்வாமி சஞ்

3. கொட்டும்திற்பட்டுடையுந் தயிர்போலே சலத்
தட்டுவரக்கெட்டு வரும்பயிர்போலே ஸ்வாமி சஞ்

4. பாய்புலியின்வாயில் உறுபசுப்போலே பெற்ற
தாய்கரம்விட்டே அலறுஞ்சிசுபோலே ஸ்வாமி சஞ்

5. ஏயவேசகாயமொன்றுங் கிடையாதோ நல்ல
தூயமனம்நீயருளத் தடையேதோ ஸ்வாமி சஞ்

6. மாயமலநோயகலும் விசுவேசா வேத
நாயகனன்னேயமனக் குகைவாசா ஸ்வாமி சஞ்

---

86-இராகம்-சுத்தசாவேரி-ரூபகதாளம்.

பல்லவி.

தருணந்தருணந் தயைசெய்வாயையா-ஓ
தேவதேவா.

அநுபல்லவி.

ஒருவனே ஜன்மலய அபாவா
ஓஓமகா னுபாவா தருணம்

சரணங்கள்.

1. சித்தஞ்சேற்றில் நட்டகம்பம்
ஜெகத்தில்இதற்குத் தினமும்கம்பம்
நித்தங்கவலை நிறைந்தகும்பம்
நீயேஇனியெனக் கவலம்பம் தருணம்

2. சோதனைக்குநான் பாத்திரவானோ
துன்பமூட்டை சுமக்கநானோ
சாதகஞ்செய்யிற் பழுதுதானோ
தள்ளினாலும்நான் போவேனோ தருணம்

3. வயிறுவளர்ப்பதே என்வேலை
மற்றநேரம் விஷயலீலை
உயிருக்குயிரே ஞானப்பாலை
ஊட்டுவாய்தொழுதேன் உன்காலை தருணம்

4. சப்தஸ்பரிச ரசகந்தா
தர்மரூபபிர மாநந்தா
சித்தகசுஜ சானுபந்தா
வேதநாயகப் பிரபந்தா தருணம்

## 87-இராகம்-தேவமனோஹரி-ஏகதாளம்

பல்லவி.

இன்னமும்தாமதமேன்-என்சுவாமி இன்ன

அநுபல்லவி.

உன்னதமாகியகுணாதீதா
உலகாதிசர்வகாரணபூதா

சரணங்கள்.

1. மழைமுகங்காணாப் பயிர்போல்வாடி
மாதைதனைவிட்ட சேய்போலாடி
தழையும்உன்குணசரித் திரங்களைப்பாடி
சாமிநானுனை யடைந்தேன்கதிதேடி இன்னம்

2. பத்தனைப்போலநான் போடுவேன்வெளிச்சம்
பாவத்தின்கடலுக்கு நானொருமச்சம்
அத்தனேமுனியாதே கொண்டேன்அச்சம்
அருவினைபோக்கி நீயருள்வாய்ஸ்வச்சம் இன்னம்

3. அரசேநீயெனைக் கைவிடலாமோ
அருளேசெயில்உன்கைப் பொருளேபோமோ
திருவரம்பா விடில்வினைசாமா
தேவமனோகர திவ்யசோமா இன்னம்

4. அனவரதசுகிர்த ஆத்மசொரூபா
அனந்தகல்யாணகுண அனாப்பிரதாபா
தினகரதினகர ஞகியதீபா
சிறியன்வேதநாயகன் இதயசல்லாபா இன்னம்



## 88-இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைத்தவிரவேறென்னைத்தாங்கிடப்
பின்னைத்துணையில்லைமன்னர்க்கரசே. உன்னை

அநுபல்லவி.

அன்னைக்கிணையாகியகனபிரபுவே
உலகோர்க்கதிதாகியமாவிபுவே உன்னை.

சரணங்கள்.

1. நீமுகம்பார்த்திடில் அணுவும்பர்வதமே
நீமுனிந்தால் பெருமலைகளும்அதமே
தாமதம்நீசெயிற் பிழைப்பதெவ்விதமே
தயைநீபுரிய இச்சமயம்உசிதமே உன்னை

2. நீரை அடுத்தவர்க்கில்லை ஜலகஷ்டம்
நின்னையடுத்தவர்க் குண்டோநஷ்டம்
ஆரையடுக்கினும் உண்டோஅதிஷ்டம்
ஐயாநினக்கன்பனாக என்னிஷ்டம் உன்னை

3. ஊரார்மெச்சிடப் பாடுவேன்பாட்டு
உன்புகழ்பாடவென்றால் வாய்ப்பூட்டு
சீராகியபெரியோர் சபைநீட்டு
தீயோருடன் எனக்கனுதினங்கூட்டு உன்னை

4. ஆதிமத்தியானந்த அபாவப்பிரகாரா
அண்டசராசர அகிலாதாரா
பூதநிர்மாண சிர்வாகசங்காரா
போதவேதநாயக புண்ணியசரீரா உன்னை

---

89-இராகம்-சுத்தசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

நானேஉனைநம்பினேன்-நலம்
தானேயருள்கனவானே நானே

அநுபல்லவி.

வானேஎனச்சுகத்தேனேபொழிந்திடும்
மன்னுபிர-சன்னுதினம்என்னுவுறும்-குன்னுமிதம் நா

சரணங்கள்.

1. காயம்பலதுவாரக் கந்தல்அதைக்
காக்கநான்போடுவேன் வாய்ப்பந்தல்
மாயவலையிற்பட்டு மதியும்விதியும்கெட்டு
மண்டுவினை-கொண்டுமிக-அண்டுதுய-ருண்டுதினம் நா

2 அருணகோடிப் பிரகாசசாத்திரா அதி
அற்புதவேதாகம சாஸ்திரா
கருணானந்தநேத்திரா கனபக்தஜனஸ்தோத்திரா
காப்பாய்முகம்-பார்ப்பாய்-வினை தீர்ப்பாய்அடிசேர்ப்பாய்நிதம்

3. விபுதகணவந்திதச் சரணா நாளும்
வேதநாயகன் அந்தக்கரணா
சுபமங்களதரணா சுஜநகுலாதரணா
ஞாயாகனை-நேயா புவித்-தாயான-சசாயாநிதம். நானே



90-இராகம்-சஹாணா-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவேளை-வந்தான்-அருள்-தந்தருளுவாய் இந்த

அநுபல்லவி.

வந்தனை நிரந்தரம் புரிந்தேன்-ஜயனே. இந்த

சரணங்கள்.

1. அன்னைபிதாஉன்னையன்றிப் பின்னையாரையா
என்னைநிதந்தின்னும்வினை தன்னைத்தீரையா
மின்னுகின்றபொன்னுலகந் தனில்வாழ்மெய்யா இந்த

2. பூதலத்தில்ஆதரவுன்பாத இணையே
பேதகமாயேதுனக்கிங்கோத இணையே
நீதகனுஞ்சாதகர்க்கபேத துணையே இந்த

3. நியநெஞ்சில்தூயஅறந்தோய இலையே
மாயையெனும்பேய்செய் அநியாயமலையே
நேயன்வேதநாயகனுக்காய நிலையே இந்த

---

91-இராகம்-சாமந்தா-ஆதிதாளம்.

பல்லவி.

மெய்ஞ்ஞானங்கொடுப்பாய்-ஸ்வாமி
அஞ்ஞானந்தடுப்பாய்-ஸ்வாமி. மெய்ஞ்

அநுபல்லவி.

பொய்ஞ்ஞானியர் அல்லாற்மேற்கருணை
பூண்டவனே என்ஆண்டவனே நீ. மெய்ஞ்

சரணங்கள்.

1. ஆஸ்திகள் யாவையும்வேண்டேன்
அநித்தியப்பொருள் நீ அருளினுந்தீண்டேன்
சாஸ்திரஞ்சொல்லும் வழிஇனித்தாண்டேன்
தருவென்னமீண்டேன் திருவடிபூண்டேன் மெய்ஞ்

2. அகமேகட்டுக் கடங்காக்கானே
ஐயோவீணே அழித்தநானே
இகமேலேநம்பினேன் மலர்த்தானே
என்னவோநானே இதுநல்லவேனே மெய்ஞ்

3. அந்நியர்க்குரைப்பேனுன் உபதேசம்
அடியேன்செய்கைகளே ஆபாசம்
என்னசொல்வேன்என் இதயப்பசாசம்
இதற்குன்மேல்நேசம் இல்லவலேசம் மெய்ஞ்

4. அத்தனைஎளியர்க் கன்னமும்ஊட்டேன்
அறுத்தகைக்குச் சுண்ணாம்புமேநீட்டேன்
உத்தமமார்க்கத்தில் உள்ளத்தைநாட்டேன்
உனைவரங்கேட்டேன் இனிவிடமாட்டேன் மெய்ஞ்

5. அவன் அவள் அதுவென அடங்காமூலா
அகண்டாதீத அபேதவிசாலா
சிவமுறுதேவநாயகன் அநுகூலா
ஜெகபரிபாலா சுகமுறுசீலா மெய்ஞ்

---

92-இராகம்-பரசு-தாளம்-ஆதி.

பல்லவி.

தேவாதிதேவபல-ஜீவாதிகாரணா உன்
சேவடியை-நம்பினேனே-ஓ

அநுபல்லவி.

நாவாரநானேபல தேவாரம்பாடவே
நாதா-வரம்-நீதா-கன தேவா

சரணங்கள்.

1. அக அருள்சூடினேன் மிகமிகவாடினேன்
அஞ்சாதேயென்றுசொல்லி ஆளொண்ணாதோ
இகபரம்நாடினேன் சுகமிலைதேடினேன்
என்மேல்இரக்கம் உனக்கேநண்ணாதோ
பகவானேநீயெனது முகம்நோக்கிபேதமை
பண்ணியருள் புண்ணியர்தொழும்

2. அன்னையும்பிதாவும்நீ ஆவிஉடலும்நீ தேவாதி
ஆசாரியன்கடவுள் யாவும்நீயே
முன்னும்நீபின்னும்நீ முத்திநீசித்திநீ
மூலாதிகாரண மும்மூர்த்திநீயே
நின்னைசவாரியில் நான்என்னேரமும்படிய
நித்தியம்பல சித்தியருள் தேவாதி

3. ஏழைநான் அல்லவோ என்னதான்சொல்லவோ
ஈசாஎன்மீது தயையெண்ணுவாயே
பாழுடலைநம்பினேன் தாழுமனம்வெம்பினேன்
பாசாந்தகாரம் அறப்பண்ணுவாயே
சூழும்அடியார்கள்மனம் வாழும்வேதநாயகா
சுத்தமுறுசித்தம் அருள் தேவாதி

---

93-இராகம்-பலஹம்சா-ஆதிதாளம்.

பல்லவி.

ஞானமார்க்கம் நானேசேர
நல்வரம் அருளையனே.

அநுபல்லவி.

ஈன அசேதன இருள்வழி நீங்கத்
தானமுமோனமுந் தர்மமும்ஓங்க ஞான

சரணங்கள்.

1. நீசனானாலும்உன்தாச னன்அலவோ
நின்னை அல்லால்தெய்வம் இன்னமும்பலவோ
ஈசனேஎன்குறை எவரிடஞ்சொலவோ
என்மொழிகாட்டிலே எரித்திடுசிலவோ ஞான

2. கர்த்தனே ஒழியாக் கவலைப்பிரபஞ்சம்
கண்ணிற்பறவைபோற் கலங்கினேன் நெஞ்சம்
உத்தமகுணத்தர உனக்குண்டோ பஞ்சம்
உன்னையல்லால் இனி வேறிலை தஞ்சம் ஞான

3. அமரர்நரர்சோபன அமிர்தலக்ஷணனே
அனந்தபோதக ஜீவாத்மரக்ஷணனே
சமரசஞானசற் குணசுலக்ஷணனே
தாசன்வேதநாயகன் பிரதக்ஷணனே. ஞான

---

94. இராகம்-சஹானா-ரூபகதாளம்

பல்லவி.

உதவிசெய்யலாகாதா-ஓ-ஜகநாதா உதவி

அநுபல்லவி.

நிதநிதமுன திணையடிகளை
நெஞ்சில்நினைத்திடவரம்நீ உதவி

சரணங்கள்.

1. அடியேன் துயர் படவேதகுமா
சுடர்முன் இருள் தானே புகுமா
கொடிதாகிய வினையால்நிலை
குலைந்தேன் மனம்-மலைந்தேன் உதவி

2. மனைவாழ்வுறு துயர்தான்மலையே
உனையல்லது கதிவேறிலையே
அனையேகொடு வினையால்மனம்
அயர்ந்தேன்-தினம்-பயந்தேன் உதவி

3. சுரசேவித பரமேசுரனே
கரபோஷக கருணாகரனே
வரவேத நாயகனே குண
வரனே-பரம்-பரனே. உதவி

95-இராகம்-சாளங்கபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைமறவாமல் எனக்கருள்வாமே
பரமே-சுபகரமே உன்னை

அநுபல்லவி.

பொன்னைநாடெளியர்போலும் எக்காலும்
அன்னைதன்னைமறவாப் பிள்ளைபோலுமே உன்னை

சரணங்கள்.

1. மங்களமாகப் பெருவாழ்வுவந்தாலும்
சங்கடமுன்கன தாழ்வுவந்தாலும் உன்னை

2. பூமண்டலம்எங்கும் புகழ்ச்சிவந்தாலும்
ஈமங்கொள்மாலேபென இகழ்ச்சிவந்தாலும் உன்னை

3, மகிழ்வுறவேவெகு மானம்வந்தாலும்
இகழ்வுறவேகன ஈனம்வந்தாலும் உன்னை

4. தலைகீழாக இத்தரைபுரண்டாலும்
அலைகடல்பெயர்ந் ததன்கரைபுரண்டாலும் உன்னை

5. அருமையாகிய சதானந்தநிலையே
மருவும்வேதநாயகன் மகிழ்கலையே உன்னை



96. இராகம்-கண்டா-ஆதிதாளம்.

பல்லவி.

வாவாவாதேவே-வந்தெனைக்
காவாயோகோவே. (வாவா)

அநுபல்லவி.

காவார்பூவே கலையோர்பாவே
ஓ ஓ வேதாவே (வாவா)

சரணங்கள்.

1, வனவேடன்வலையே-மாட்டி-மனநோயுறுங்கலையே
எனவேதுயர் அலையே-சார்ந்தஎன் இடர்யாவையுந் தொலை
மனமார்பிலையே மதியோர்கலையே
கனமார்குணமலையே (வாவா)

2. உடல்விழுந்திடுமுனமே-பரனே உனையே அநுதினமே
திடமாளென்மனமே நினைத்திறம்செயவே அருள்கனமே
அடியார்தனமே அயலார்சினமே
படியார்தமக்கினமே. (வாவா)

3. நினையாளென்மதியே உலகில் நிதமும்செயும்சதியே
வினைதீர் இதுகதியே-பரவும் வேதநாயகன்நிதியே
அனைவோர்நிதியே அருள்வாரிதியே
தனைநேர்பரகதியே. (வாவா)

---

97. இராகம்-உசேனி-ஏகதாளம்

பல்லவி.

கருணைப்ரதையா-இக்கால-ஹரணப்ரதையா.

அநுபல்லவி.

கருணையால்உலகனைத்துந் தாங்குபகாரா-தீரா-உதாரா
காணும்பிரபஞ்சம் தனிற்சிக்கிக்
கோணும்என்னெஞ்சம் அநுதினம்
பேணும்பொய்வஞ்சம் இனிஉந்தன்
மாணடிதஞ்சம் எனத்தொடர்
கருமத்தனையேநீக்க தருமத்தனிலேயாக்க (கருணை)

சரணங்கள்.

1. ஆண்டான் அடிமையை வேண்டாமெனத்தள்ளின்
ஐயாபுகலினிஏது மிக
நீண்டநின்கால்களைப் பூண்டுகொண்டேன்விடேன்
நீங்கினிச்செல்வதேது-சற்றும்
தீண்டாதெனைத்தள்ளினும் விடுவேனோ
திருவே தருவே குருவே
தினம்என்மீது கினைதபி
மானம்விடாது இனமதி
ஈனஞ்செய்திடு தொலையமெய்ந்
ஞானபக்தீது பழுதற
சித்தத்துமருட்கோவே கர்த்தத்துவமுறுகிதே. (கருணை)

2. நீயெனை நீங்கிடில் எங்கும் உள்ளோனெனும்
நின்பெயர்க்குக் குறைவாமே அழுஞ்
சேயர்தமக்கழு தீயா திருப்பரோ
சிறந்த அன்னையர்தாமே-வரம்
ஆயிரந்தாங் கேட்டுங்கொடாயிது
அழகா-குழகா-பழகா
தற்றபொன்போலே நடையின்றி
முற்றமென்மேலே கொண்டேன் என்தன்
சிற்றறிவாலே எனைவிதம்
ஆளாய்பலபுவிநாதா மாளாநலமுறுநீதா. கருணை

3. எத்தனைசொல்லினுஞ் சித்தம்நின்மார்க்கத்தில்
என்றும்பதிந்திட இல்லை-மிக
இத்தரையெங்கும் பிரசித்தனே சீசற்
றிளகச்செய்வாயித்தக் கல்லை உயர்
வித்தகனே வேதநாயகன் போற்றிடும்
வேதா-நாத-அபேதா
மின்னும்பிரக்யாதா அடியன்மேல்
இன்னமும்வாதா எனை அஞ்சல்
என்னஒண்ணாதா நின்காதில் என்
சொன்னுழையாதா அநுதினம்
வேதத்தர்சர்வேசா திகற்றவர்மணவாசா கருணை

---

98. இராகம்-பூரிகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

நம்பினேன் உனையே-தற்காத்தருள்
வெம்பியஎனையே-அநுதினம் நம்பினேன்

அநுபல்லவி.

அப்புவிஎங்கும் நிறம்பும்பலஉயிர்க்
கின்பம்பொழிபுயலே உன்றன்செயலே
உண்டோஅயலே அநுதினம். நம்பினேன்

சரணங்கள்.

1. புவனகாரண-பவநிவாரண-நவஉத்தாரணனே
சம்பூரணனே-மெய்யாரணனே-அநுதினம் நம்பினேன்

2. கோரவினைப்பரி-கார அகிலவிஸ்-தார அதிகார
உபகார-அதிதீரா-அநுதினம். நம்பினேன்

3. சுகுணசேகர-மிருமனோகர-சுகிர்தசாகரனே
பராபரனே-தயாபரனே-அநுதினம். நம்பினேன்

4. பஜிக்கும்தொண்டர்கள்-புசிக்கப்புசிக்க-ருசிக்கும்
தேன்மயமே-அதிசயமே-அருள்நயமே அநுதினம் நம்பினேன்

5. வேதநாயகன்-போதமுறப்பிர சாதம்அருள்பொருளே
மனஇருளை-தொலைத்தருளை-அநுதினம் நம்பினேன்



## 99. இராகம் நாகத்தொனி-திசிரம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

தேவாதிதேவனே-ஜீவனேபிரபாவனே தேவாதி

அநுபல்லவி.

ஜீவாதிகாரனே தீரனே சூரனே
ஜெகத்திலே மனம்வாடி நொந்தேன்
மகத்துவேஉனைநாடிவந்தேன் தேவாதி

சரணங்கள்.

1. எங்கும்நிறையும்நீ எனக்குன்னைக்காட்டாய்
ஈதென்னகண்கட்டு மாயமோ
அங்குஇங்குமே உனைத்தேடி
அலையவைத்தா யிதுஞாயமோ
தங்குபதேசம் செய்யாயின்னம்
தான்அடியேன் சிறுபிராயமோ
என்குலதெய்வமே தாயேதந்தையே
இதுதான்புத்திர நேயமோகன தேவாதி

2. எத்தனையோபிழை செய்தேன்அப்பிழை
எண்ணஉன்னாலும் கூடுமோ
கத்தனேநீயருள் செய்தால்என்னோடு
கருமப்பேய் போராடுமோ
அத்தனேஎன்பால் நீவரில்உன்தன்
அடிகள்வருந்தி வாடுமோ
இத்தலம்நீவரில் முத்தர்கள்சமுகம்
எங்கேஎன்றுனைத் தேடுமோ உயர் தேவாதி

3 அருளிற்பெரியனீ மருளிற்பெரியனான்
ஆதரிப்பதுன் பாரமே
பொருளிற்பிரியனை யிருளுக்குறியனைப்
புரிந்தேன் துர் வியாபாரமே
ஒருமைப்பாடறு மனதுக்கேதினம்
ஊரெல்லாம் சஞ்சாரமே
திருற்புதனே வேதநாயகனே
செய்வாய்நீஉபகாரமே-ஒரு. (தேவாதி)



## 100. இராகம்-குந்தளவராளி ஆதிதாளம்

பல்லவி.

நிதம்நிதம்உனையே-தொழுதேனே
பதமலர்-அருள்கோனே (நிதம்)

அநுபல்லவி.

சத்தவைபோகா சகலநிர்வாகா
மதுரப்பிரவாகா வரகுணயோகா (நிதம்)

சரணங்கள்.

1. அறம்வர இலையே அகம்அறவிலையே
மறம்ஒருமலையே மனமொருநிலையே
புறமயல்வலையே புருமதிகலையே
அறவறநிலையே துயர்வினைதொலையே (நிதம்)

2 மலம்வளர்தீயே மனமொருபேயே
புலமொருநாயே புலிகொடுமாயை
பலவிதமாயே படவுறும்நோயே
தலமிசைநீயே தயைபுரிவாயே, நிதம்

3. அடியவர்இனமே அருள்மலர்வனமே
கொடியவர்சினமே குறையறுதனமே
முடிவறுதினமே முறையுறுகனமே
அடிதொழும்வேத நாயகன்தரிசனமே நிதம்



## 101. இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

என்னசொன்னாலும்நீ இரங்காதிருப்பது
ஏதோகருணைக்கடலே.

அநுபல்லவி.

உன்னதவகனே உலகநிர்வாகனே. என்ன

சரணங்கள்.

1. இகசுகம்அநுசிதம் என்பதேதன் அபிமதம்
தகவுறும்உயர்பதம் தாவெனவேவிதம். என்ன

2. இன்னமும்என்சினம் எனக்குநின் தரிசனம்
மன்னஎன்கண்முனம் வாவெனவேதினம். என்ன

3. மாயைபடாந்திரம் மாறதொர் தந்திரம்
நீயருட்சுதந்தரம் நீட்டெனநிரந்தரம். என்ன

4. உலகவியாபாரமே ஒழியாவிசாரமே
கலகசம்சாரமே கவலைஅபாரமே. என்ன

5. அருமைவாசகா அடியர்பிரேயாசகா
தருமப்பிரதாயகா தனிவேதநாயகா. என்ன

---

## 102. இராகம்-இந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்

பல்லவி.

நாதா அடியேன்-மீதேன்கோபம் நாதா

அநுபல்லவி.

ஆதாரமாகவே அகிலத்தைதாங்கும் நாதா

சரணங்கள்.

1. தாரம்சுதர் இல்லாச் சந்நியாசிஎன்றேனோ
சீஷரில்லாப் பரதேசிஎன்றேனோ நாதா

2. தந்தைதாயில்லாத தனியர்என்றேனோ
எந்தஉயிரும்பெற்ற இனியர்என்றேனோ நாதா

3. மன்னனும்கைப்பொருள்இல்லா வறியர்என்றேனோ
சின்னஅணுவும்நுழை சிறியர்என்றேனோ நாதா

4. உரிய ஆண்பெண்ணல்லா ஒருத்தர் என்றேனே
விரிபலயுகங்கண்ட விருத்தர் என்றேனே (நாதா)

5. ஆதி அந்தம் இல்லா அநாதி என்றேனே
ஜாதிகுலமில்லா நிர்ஜாதி என்றேனே (நாதா)

6. வீடுவாசல் இல்லாத வெளியர் என்றேனே
கூடன்னம் துணியில்லா எளியர் என்றேனே (நாதா)

7. மனம்புகுந்தொளிக்கின்ற மாயர் என்றேனே
உனும்நெஞ்சுக்கெட்டா உபாயர் என்றேனே (நாதா)

8. சகலஉலகைச்சுமை தாங்கி என்றேனே
மிகநரர் அன்புக்கு வீங்கி என்றேனே (நாதா)

9. மற்றோர்கண்ணிற்படாத மானி என்றேனே
முற்றும்வாய்பேசாத மோனி என்றேனே (நாதா)

10. குணமில்லாகளைக்காயும் கோபி என்றேனே
அணி அங்கமில்லா அரூபி என்றேனே (நாதா)

11. சீர்பேர் இல்லா அநாம தேயர் என்றேனே
ஆரும்துணை இல்லா அபாயர் என்றேனே (நாதா)

12. மாதின்றி உலகீன்ற மாயம்சொன்னேனே
வேதநாயகா இன்னம் வேறென்சொன்னேனே (நாதா)

---

## 103-இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைப்போல எனக்குற்றபேர்கள் இந்த
உலகந்தன்னில் உண்டோ

அநுபல்லவி.

அன்னை தந்தைகுருதேவே-இந்த-அகிலகாரணபிதாவே (உன்)

சரணங்கள்.

1. தந்தைதாய்க்கு மனஸ்தாபம் வரில்
சாற்றுவார்கள் பலசாபம் மண்ணில்
எந்தநேரமுமே பாவம் செய்யும்
எனக்குநீசெய்வது லாபம் (உன்)

2. அண்ணன்தம்பிக் குண்டுபாகம் அதை
அடையுமட்டும் அவர்ஸ்நேகம் பின்பு
எண்ணுவார்கள் பல துரோகம் நீ
ஈவைநன்மைகள் அநேகம் உன்

3. மனைவிபாலர்க்கன்ன வஸ்திரம் தரும்
மட்டுமே அவர்கள் மித்திரம் பின்பு
நினைவர்செய்வர்பல குத்திரம் என்றும்
நீடும் உன்னருள் சமுத்திரம் உன்

4. ஏவல்மன்னர்க்குண்டு திறையே அதை
ஈந்திடாதவர்க்குச் சிறையே உன்னை
மேவினோருக்கில்லை குறையே தொழும்
வேதநாயகன்தன் இறையே உன்



104-இராகம்-காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

நாளேநல்லநாள்—புண்ணியம்செய்யும்

அநுபல்லவி.

ஆளும்வேதநாயகன் தாளினைபூசிக்கும் நாளே

சரணங்கள்.

1. பாபமில்லாதகால க்ஷேபமும்சுஜனசல்
லாபமுமேபரம லாபமாகக்கொள்ளும் நாளே

2. வேதமும்பெரியவர் போதமும்தேவசங்
கீதமும்முதலான நாதங்களுடன்செல்லும் நாளே

3. ஞானமும்ஜீவாபி மானமும்பரன்பத
தியானமுமேசெய்து மோனநிலையில்நிற்கும் நாளே

4. பத்தினிசுதர்குடும் பத்தவர்யாவரும்
சித்தநிர்மலமுடன் பக்திபுரிந்திடும் நாளே

5. கூனர்குருடர் அங்க ஈனர்பிணி உடையோர்
தீனர்முதலியோர்க்குத் தானதருமஞ்செய்யும் நாளே



105-இராகம்-சவாரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதோ இன்னம்வாதோ இரங்காதோ உன்மனமே

அநுபல்லவி.

வேதவரோதய விமலச்சந்திரோதய
வித்தகநயகுண உத்தமசிரேஷ்டா
பத்தர்கள்பழுதறு சித்த அபீஷ்டா (ஏதோ)

சரணங்கள்.

1. ஐம்புலவேடர்வேட்டை ஆடித்திரியுங்காட்டை
வெம்பாசப்பேய்வாழ்வீட்டை விரும்பியேதுன்பமூட்டை
மேவிமனம்அயர்ந்தேன் நிலைமையில்லாப்
பூவின்சுகம்வியந்தேன் அனுதினமும்
பாவவழிநயந்தேன் இனிமேல்வரும்
சாவையெண்ணிப்பயந்தேன் நிரந்தரமும்
தரைமுதலாகவெங்கும் விரியும்சுந்தரமே
அரியகருணைமழை சொரியுங்கந்தரமே (ஏதோ)

2. தீயமனோவியாபாரம் தீர்ந்திடவேஇந்நேரம்
நீயருள்பரிகாரம் நின்பதமேஆதாரம்
நேசஅபிமானம் சற்றும்இல்லாமல்
பேசுவேன்ஞானம் எனக்குலவ
லேசம்அனுஷ்டானம் இலையேஉப
தேசசன்மானம் கொடுத்தருள்செய்
தினமனமகிழ்வுறு கனதிரவியமே
அனவரதமும்ஒளிர் தினகரமயமே (ஏதோ)

3. நீர்க்குமிழியெனவே நிலையாவாழ்வுகனவே
பார்க்குள்உணேஉனவே பரிந்தருள்வாய்நனவே
பாசம்குலையாதா எனக்குமோகா
வேசம்கலையாதா உலகம்செய்யும்
மோசம்தொலையாதா உன்மீதுகன
நேசம்நிலையாதா நிலைமைபேறு
நீதநிரஞ்சன அபேதசுகுணமே
வேதநாயகன்மனப் போதமர்மணமே (ஏதோ)



## 106-இராகம்-பந்து-ஆதிதாளம்.

பல்லவி.

நீயேசர்வசக்தன்-நல்ல
நிச்சயனே கன அக்ஷயனே

அநுபல்லவி.

தாயுந்தந்தையுந் தமரும்அற்றாயே
மாயுந்தொழிலறு வாழ்வுபெற்றாயே (நீயே)

சரணங்கள்;

1. பல்லாயிரம்அண்டம் படைப்பாய்உடைப்பாய்
எல்லாஉலகமும் எள்ளினுள்அடைப்பாய் (நீயே)

2. அஸ்திவாரந்தூண் அருஞ்சுவரில்லையே
பத்தியாநீசெய்த பகிரண்டமில்லையே (நீயே)

3. பலபொருள்தாங்கிடும் பர்வதம்போலே
தலையண்டகோடிகள் தாங்குவாய்போலே (நீயே)

4. திரிநெய்செப்பில்லாத் தீபங்கள்போலே
பரிதிசந்திரன்மீன் பலசெய்ததாலே (நீயே)

5. அண்டம்அகண்டம் அடங்காதசரீரம்
தொண்டர்கள்மனமலர் சுமக்குமோபாரம் (நீயே)

6. பாரபூதங்கள்உன் பணிசெய்யுஞ்சரியே
சூரியன்உனதுடற் சோதிமுன்கரியே (நீயே)

7. யுகம்பலகோடிகள் உனக்கரைக்ஷணமே
நிகழுமுக்காலமு நினக்குக்கிரகணமே (நீயே)

8. சகலர்க்கும்ஊட்டிநீ தானென்றும்உண்ணாய்
நிகழ்பெருங்காவலால் நித்திரைபண்ணாய் (நீயே)

9. தினகரசந்திர தீபம்ஏற்றிவோய்
வனமுகிற்கடத்தால் மழையூற்றிவோய் (நீயே)

10. நடவாய்பறவாய் நாடெங்குமிருப்பாய்
உடலாய்உயிராய் உயர்வாய்பெருப்பாய் (நீயே)

11. மரங்களினுழைந்தே மலர்வாய்கிளைப்பாய்
கரங்களில்லாதே கருமங்கள்விளைப்பாய் (நீயே)

12. கண்ணைப்பொருள்களைக் காட்டுவாய்பார்ப்பாய்
அண்ணுசகலமும் ஆட்டியேதீர்ப்பாய் (நீயே)
13. கனைகடல்உன தருட் கடலிலோர்திவலை
இனிவேதநாயகா எனக்கென்னகவலை (நீயே)

---

107. இ-ம்-தோடி-ரூபகதாளம்

பல்லவி.

ஞானகுருபரவடிவே அருமறையின்முடிவே (ஞான)

அநுபல்லவி.

மோனசுகாசனசம்பிரம முத்தியளித்திடும் நித்தியபரப்பிரம (ஞான)

சரணங்கள்.

1. பாமரனுனென்மீ தினக்குக்கிருபையில்லையா எந்தன்
பாவம்தொலைத்தென்னை ஆள்வதுனக்கொருமலையா
தாமதம்நீசெய்யதேகம் எனக்கென்னநிலையா நிதம்
தஞ்சம்பத கஞ்சப்பிர பஞ்சம்தரு நஞ்சம்தொலை ஞான

2. தீனகிருபாநிதியென்று பேர்கொண்டநீ அலவா அருள்
செய்தென்னை ஆள்வதினால் உனக்கியாதொருசெலவா
ஆனமலர்பதம்அண்டும் நான்கிள்ளைநீ இலவா புவி
அஞ்சும்புலன் அஞ்சுப்பகை நெஞ்சம்செயும் வஞ்சம்தொலை ஞா

3. நின்மலநித்திய நிரஞ்சனநீதவிநோதா நாளும்
நிகிலசராசரம் யாவையும்தாங்கும்பிரக்கியாதா
தன்மவிலாச சுகானுபாவானந்தநீதா எனைச்
சாடும்வினை வாடும்வழி பாடும்பர வீடும்கொடு ஞான

4. நம்பும்அடியவர் துன்பம்அகற்றுங்குணாளா பவ
நாசமகேசபிர காசவிலாசதயாளா
அம்புவியில்வேதநாயகன் போற்றும்பொற்றாளா இங்கும்
அங்கும்புவி எங்கும்புகழ் தங்கும்பகிரங்கப்பெறு ஞான.

## 108-இராகம்-ஈசமனோகரி-ஏகதாளம்.

பல்லவி.

மெய்யிது மெய்யிது மெய்யிது தேவே மெய்

அநுபல்லவி.

ஐயையோவென் செய்வேன் அருள்புரிகோவே மெய்

சரணங்கள்.

1. மலர்த்துணைப்போற்றாத வாயனும்நானே
கலந்துநின்பணிசெய்யாக் காயனும்நானே மெய்
2. கண்டுநீர்பெருகாத கண்ணனும்நானே
அண்டிப்பாவியர்க்கெல்லாம் அண்ணனும்நானே மெய்
3. நிதம்உனைநினையாத நெஞ்சனும்நானே
மதங்கொண்டுதிரிகின்ற வஞ்சனும்நானே மெய்
4. கனிந்துனைச்சேவியாக் கரத்தனும்நானே
தினந்தினம்வணங்காத சிரத்தனும்நானே மெய்
5. கருதிஉன்புகழ்கேளாக் காதனும்நானே
சுருதியைமறுத்திடும் சூதனும்நானே மெய்
6. கடுகஆலயம்செல்லாக் காலனும்நானே
முடுகியவினைக்கெல்லாம் மூலனும்நானே மெய்
7. போதஅபேத புநிதநிஷ்கோப
வேதநாயகன்தொழும் விமலசொரூபா மெய்



## 109-இராகம்-சாமா-ரூபகதாளம்.

பல்லவி.

பரபிரமமே திருவருள் தரல்கிரமமே அநுதினமும்

அநுபல்லவி.

வரகுணசுகாநுபவ
சுரகணபூஜிதவைபவ (பரபிர)

சரணங்கள்.

1. செய்வதெல்லாம் தீவினையே
நினையளவும்உனை நினையேன்
தெய்வமேநம்பினேன் உனையே
தீர்த்தருள்வாய்துயர் தனையே (பரபிர)

2. அறியேன்மேற்குக் கிழக்கு
அன்புமில்லேன் நின் சழற்கு
சிறியேன்மேல்வன் வழக்கு
ஜெபதபத்தில்லனைப் பழக்கு (பரபிரம)

3. பாழ்மனமோவல் லிருப்பு
பாவம்அதற்குக் கருப்பு
தாழ்வுறுநான்சிறு துரும்பு
சாமிஎன்மேல்மனந் திரும்பு (பரபிரம)

4. நினையேன்தர்மம் அதர்மம்
நிலமிசைநான்மூட ஜென்மம்
அனையேவதின்னம் வர்மம்
அகற்றிடுவாய்எனது கர்மம் (பரபிரம)

5. அசண்டமண்டலாதி பத்திய
ஆதியந்தரகித நித்திய
மிகுந்தகுணபாண சத்திய
வேதநாயகன் ஸ்துத்திய (பரபிரம)

---

110 இராகப்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

பாதம்நம்பினேனே-போதம்அருள்கோனே

அநுபல்லவி.

வேதமுதலோனே மாதவர்பிரானே (பாதம்)

சரணங்கள்.

1. ஆதாவுநீயே ஐயனேஎன்தாயே
வாதமலநோயே மாற்றி அருள்வாயே (பாதம்)
2. தீங்குகள்அனேகம் செய்திடும்என்துரோகம்
நீங்கிடவிவேகம் நீஅழில்அமோகம் (பாதம்)
3. முத்தர்கள்சமுகனே முக்கியபிரமுகனே
உத்தமசுமுகனே ஓவேதநாயகனே (பாதம்)

## 111-இராகம்-கனகவசந்தம்; ஆதிதாளம்.

### பல்லவி.

நீயே துணைபரனே-துன்பம்
நீங்கிட-அருள்வரனே

### அநுபல்லவி.

மாயாதிமிர விஜயதினகரனே
தாயாகியசர்வ சாதககரனே நீயே

### சரணங்கள்.

1. அடியேன்செய்வதெல்லாம் அரும்பாவம்
கொடியேன்மீது கொள்ளாதேகோபம் நீயே

2. பண்ணேன் துதியே படியேன்விதியே
கண்ணேமணியே கதியேநிதியே நீயே

3. உனையேநம்பிடில் உண்டோபயமே
அனையேவினை தீர்த் தருள்வாய்ஜெயமே நீயே

4. மாதவம்வுடையவர் மகிழ்மலரகிதா
வேதநாயகன்தொழும் விபுதர்கள்சகிதா நீயே

—[*]—

## 112-இராகம்-பைரவி-திரிபுடைதாளம்.

### பல்லவி.

நாதாகன-மேதாதினம்-நீதாவரமே

### அநுபல்லவி.

போதாசுக-தாதா அதி-கியாதாபிர-சாதாபுவி நாதா

### சரணங்கள்.

1. நித்தியம்அநித்திய சுகத்தினைமதித்திடு
பைத்தியம்விடுத்தினிய சத்தியம்உதித்திடவே நாதா

2. சுந்தர மடந்தையர்கள் சந்திரமுகந்தனை
நினைந்தெனது சிந்தைசெய் தந்திரமொழிந்திடவே நாதா

3. சொப்பனமேலப்பனைகொள் அற்பஉடலைப்பொருள்
எனப்பிரியம் வைப்பதற நற்பலன்உறப்புவன நாதா

4. மாதர்சீதிபூதலமேல் ஆதரம்உறுதபடி
சாதகப்பிரபோதமருள் வேதநாயகனைபுகழும் நாதா

113-இராகம்—நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

வேதநாயகனே-மெய்-மெய் மெய் மெய்

அநுபல்லவி.

பாதகஞ்செய்தழலும் பாழ்மதியே ஐயன்
பாதகங்கள் அன்றி நமக்கார்கதியே
பூதலவாழ்விஞெடு புகழ்ச்சியே வெறும்
பொய் பொய் பொய் பொய் வேத

சரணங்கள்.

1. அத்தமியாதொளிர் திவாகரனை அதி
அற்புதமான சிவாகரனை
சித்தமிசைஒளிர் சுதாகரனைத் துதி
செய் செய் செய் செய் வேத

2. பூதலம்எங்கும் இசைபோனவனை அதி
புனிதனை உயிர்க்குயிர் ஆனவனை
மாதவர்காணுகின்ற மானவனை உன்னுள்
வை வை வை வை வேத

3, நாதபூதபௌதிகஸ் தாபகனை வேத
நாயகன் மீதில்லென்றும் ஞாபகனை
ஓதரிதானசர்வ வியாபகனைப் பணிந்
துய். உய் உய் உய் வேத

114-இராகம் கௌளிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

ஓஜெகநாதா ஒருவரம் உதவிடல்ஆகாதா

அநுபல்லவி.

தேவேதினம்பல பாவேபாடிஎன்
நாவேவயிலாத்தேனே ஓஜெக

சரணங்கள்.

1. மனம்விதைப் பிரியம் சகலமும்
வாசா கைங்கரியம்
சினம்மதம் மாற்சரியம் பூண்டனன்
செய்கைகள் ஆச்சரியம்
இனமாகியபக்த ஜனமுடன் ஐக்கியம்
கனவினும்நீங்காமல் ஓஓ

2. பொய்யைமெய் யெனநாடி அநித்தியப்
பொருள்களை யேதேடி
வையகம் எங்கும் ஓடி நான்செய்த
வஞ்சகம் பலகோடி
மையற்கரி இடர்கள்-செய்யவேதொடருதே
ஐயோ கூ கூ கூ ஓஓ

3. நேசர்சித்தா மணியே அடியேன்
நெஞ்சகம்பூண் அணியே
ஆசையில்வரும் பிணியே தொலைத்துநல்
அருமேவிடப் பணியே
ஈசனேஉனைத்தொழும் தாசன்வேதநாயகன்
பாசவலைஉறாமல் ஓஓ



115-இராகம்-தேசமுகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

போதம்தாஎன்ன விவாதம் எனக்கமல
போதம்தாஎன்ன விவாதம்

அநுபல்லவி.

வேதம்உணர்ந்தொழுகும்
நீதம்உடையவர்க்குப்
பேதம்அரவாப்பிர
சாதம்அருள்தெய்வமே போத

சரணங்கள்.

1. மோகம்பெருகியவெள்ள
கேள்வுப்பெருப்பிர
வாகந்தனில் அழுந்தி
ஆகம்மெலிந்தேன் ஐயா போத

2. நெஞ்சோர் புறம்புனல்கள்
அஞ்சோர் புறம்மின்னூர்கண்
நஞ்சோர் புறம்வருத்தும்
என்சோர் வெலாம்அகலப் போத

3. பெண்ணாசையாலும்வளர்
மண்ணாசையாலும்மனம்
எண்ணாசையாலும்மனம்
புண்ணாகிவடிவானேனே போத

4. ஏதும்அறிவில்லாஎன்
மீதுவர்மஞ்செய்தக்த
காதுபரமபக்தர்
ஓதும்வேதநாயகா போத

116-இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

சருவேசாசரணம் எனக்குன் தாளே ஆபரணம்

அநுபல்லவி.

இரவும்பகலும் உனையே அநுசரணம்
இசைந்திடச்செய்யிது நல்லபிரகரணம் சரு

சரணங்கள்.

1. நீயேசெய்வதெல்லாம் உபகாரம்
நின்மேற்சொல்லஉண்டோ விவகாரம்
தீயேன்புரிந்திடும்பிழைகள் அபாரம்
தேவாசெய்இதற்கோர் பரிகாரம் சரு

2. புண்ணியம்செய்திலன்கடுகுப் பிரமாணம்
பொய்யன்நான் ஆயினும்இது பிரமாணம்
எண்ணிடில்எனக்குமின்னூர் விழிபாணம்
என்சரித்திரம்பெருங்கதர் புராணம் சரு

3. பேசுவதெல்லாம்வாசா ஞானம்
பெரும்பாவியர்க்கெல்லாம்நான்பிர தானம்
நேசர்சகலமும்உனதா தீனம்
நீயருள்எனக்குக்கிருபாரச பானம் சரு

4. சமேல்நிராடுக்கின்றபாணம் பிரயோகம்
எனநீமுனிந்திடில்வரு நிர்வாகம்
மாமோகாநியில்மயங்கி னேன்ஆகம்
வரவேதநாயகா அருள் பரிபாகம் சரு

117. இராகம் நாதநாமக்கிரியை ரூபகதாளம்.

பல்லவி.

சமையம்ஈதையா நலம்எனக்கமையஓதையா

அநுபல்லவி.

அமர்செய்தீவினைச் சுமைதொலைத்தெனை
அமலன் ஆக்கிடல்நேர்த்தி ஒரு
சமமிலா அருட்பூர்த்தி உறு
விமலகாரணமூர்த்தி சம

சரணங்கள்.

1. இன்னம் தாமசமோ வினைசுமந்
திடஎன்றால் வசமோ எனக்
கின்னல் சகசமோ உனக்கருள்
ஈப அவசமோ
அன்னமென்னடை மின்னல்நேரிடைக்
கன்னியர் விழி இணையே மனம்
தன்னில்பாய்ந்திடும் கணையே இனி
என்செய்வேன்நீ துணையே சம

2. கருணை கூராயோ எனதுளக்
கவலை தீராயோ இந்தத்
தருணம் வாராயோ எளியேன்
தன்முகம் பாராயோ
இரணியம்பெண்கள்போல்-தரணிமீதந்தக்
காணமேவமெய் துறந்தேன் கடல்
திரணம்போலெங்கும் பறந்தேன் உன்றன்
சரணபங்கயம் மறந்தேன் சம

3. மாயை நீக்காயோ எனைமுகம்
மலர்ந்து நோக்காயோ வினைத்
தீயைப் போக்காயோ எனைவிநி
சீலன் ஆக்காயோ

நீபரா நசகாயமேதினித்
தியவர்பயங்கரனே-மல
நோய்அறஅருள்வரனே வேத
நாயகன்தொழும்பரனே ப௯

118-இராகம்-இந்துஸ்தான்காபி-ஆதிதாளம்.

பல்லவி.

வாவா வாவா என் இருதயந்தனில்
வந்தேமலரடி தந்தே ஆண்டிட வாவா

அநுபல்லவி.

சாவால்வருந்துமுன் காவாகாத்திடில்
தாவா பூவார் ஜீவா தேவா வாவா

சரணங்கள்.

1. மின்னார்கள்விழிவலை தன்னால்தயங்கினேன்
உன்னாதரவில்லாமல் பன்னாள்மயங்கினேன் வாவா

2. பொய்யானவாழ்வுதனை மெய்யாகநம்பினேன்
ஐயாநின்னடிக்கன்பு செய்யாமல்வெம்பினேன் வாவா

3. சிந்தாகுலங்கெட விரைந்தாளில்தின்மையா
எந்தாயேநீயெனை முனிந்தேகல்நன்மையா வாவா

4. வேதநாயகன்தொழும் சீதமலர்ப்பாதனே
ஆதவன்எனப்புவி மீதில்வருநாதனே வாவா

119-இராகம்-இந்துஸ்தான் காபி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னமும்என்மீதுனக்-கேன்பராக்கு
நின்னருள்தந்தே-யெனைநீகைதூக்கு இன்ன

அநுபல்லவி.

பன்னரியபுவன மனோகரா
உன்னதப்பிரதாபா கிருபாகரா இன்ன

சரணங்கள்.

1. ஏதுங்கதியில்லா ஏழைநானே
என்னசெய்யும்சலம் நீங்குமீனே
பாதவனஜமலரே நம்பினேனே
பாகேஅமுதே பசுந்தேனே (இன்ன)

2. கானலெனும்காயசுக போகம்நாடிக்
கர்த்தனேசெய்தேன் வினைகோடிகோடி
வேனில்வெயிலுற்ற புழுப்போலேவாடி
வேதனைவந்தேன் உந்தன்பாதந்தேடி (இன்ன)

3. அண்டபகிரண்ட சர்வாதிகாரா
அவ்வியக்தமய அசகாயசூரா
தொண்டன்வேதநாயகன் மனோசஞ்சாரா
தோஷபரிகாரா உதாரதீரா (இன்ன)

---

## 120 இராகம் சுருட்டி சாப்புதாளம்.

பல்லவி.

இப்படிப்பட்டநான்-எப்படிஉன்முகத்
தேவந்துவிழிப்பேன்-ஐயா இப்ப

அநுபல்லவி.

தப்பறியாதவர் தமதறிவினைத்தூண்டும்
தாயேதந்தையே என்மேல் நீயே இரங்கவேண்டும் இப்ப

சரணங்கள்.

1. பாதாதிகேசபரியந்தமும் நான்விடம்
பகலும் இரவும்மாயைபண்ணும் என்நெஞ்சில்நடம்
ஏதம் அற அந்நெஞ்சம் ஏகா இடம்எவ்விடம்
எனினும் உன்னிடம்வர வெனில் அதுமுழுமுடம் இப்ப

2. கத்தனே என்மேல் அற்பக் காற்றடிக்கினும்பொறேன்
காசினியெல்லாங்கெட்டுக் கலங்கினும்துயருறேன்
எத்தனைபொருள்பிறர் எனக்கீந்திடினுமறேன்
எச்சிற்கையாலுங்காகம் ஓட்டிநான் இழிவுறேன் இப்ப

௫. இகமிசைநான்சுமக் திடுலதுபழிச்சுமை
எனினும்பிறர்செய்பற்ப இடருக்கும்செய்யேன்க்ஷமை
மிகஅற்பர் தமைச்சேர்வ தல்லால்மேலவர்தமை
வேதநாயகனேநான் மேவிஅறியேன்இமை (இப்ப)

## 121-இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

எந்தவிதமும் உன்-சுந்தமலர்ப்பதமே-அடியேன் அடைந்திடச்
சிந்தைமகிழ்ந்துநீ-தந்தருள்வாயிதமே (எந்த)

அநுபல்லவி.

அந்தரமெங்கும்-அமர்சர்வசாக்ஷியே
வந்தனைசெய்பவர் மானசசாக்ஷியே (எந்த)

சரணங்கள்.

1. சகசமானிடர்தமக்குப்பாவமே-பிழையாவும் பொறுத்துத்
தயைசெய்தாள்வதுநின் சுபாவமே
தகவே உன்சரித்திரப்பிரபாவமே அநுதினமும்பாடிச்
சாதகப்பெற என்மனோ பாவமே
தந்தைநீதானே-உனக்கொரு
மைந்தனும்நானே-இவ்வாறுநான்
சொந்தமானேனே-தரிசனம்
தந்தருள்கோனே-புவிதனில்
நிகரில்லாத நியாயப்பிரசுத்தனே
சகலலோக சராசரகர்த்தனே (எந்த)

2 மணல்அன்னத்தில்கல்லாய்த்திடும்வகையேஎனைச்சோதித்திடில்என்
மனத்தில் உள்ளதெல்லாம் வினைத்தொகையே
குணம்உண்டோபுவிவாழ்வுவெறும்புகையே அதைவிரும்பி
என்மனக்குரங்கும் ஐம்புலன்களும் செய்யும்பகையே
கோதையர்மோகம் தனில்வரும்
வாதை அநேகம் எவர்க்குமே
ஈதுபோகம் எனக்கினிப்
போதும் இப்போகம் அநுதினம்
புணரும் ஆநந்த பொக்கிஷசாலையே
பணமிருந்தருள் பருப்சோலையே (எந்த)

௩. தாதைபிள்ளையைத்தள்ளல்பாந்தமா இதுநான்குபேரும்
சரியென்றொப்புக்கொள்ளும் சித்தாந்தமா
நாதனே எனைமுனிதல்சாந்தமா எனதுள இரும்பையெந்
நாளும் இழுக்கும்விஷயம்காந்தமா உனையேகதியென
நண்ணியசித்தர் பெருந்தவம்
பண்ணியசித்தர் நிகரறு
புண்ணியபத்தர் முதலிய
எண்ணிலாமுத்தர் அடையுமுன்
பாதநிதிஅவர்க்கே பிதிராஸ்தியா
வேதநாயகன்பங்கென்னநாஸ்தியா (எந்த)



122-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏகாகனேயோகா அநுதினம்-எனையாண்டருள்வாயே.

அநுபல்லவி.

சேகரகுணதிவ்ய தேஜோமயகாத்திர
பாகநித்தியானந்த பாக்கியபரமக்ஷேத்திர. ஏகா.

சரணங்கள்.

௧. கண்டுநிகர்மொழியும்-வண்டுநிகர்விழியும்
தண்டுநிகர்புயமும்-கொண்டுமயக்குமந்தப்
பெண்டுபிள்ளைகட்குழைத்-துண்டுறங்கிநிதமும்
மண்டுவினையலாதுன்-தொண்டுசெய்தறிகிலன் ஏகா.

௨. நாடேன்பெரியரொடு-கூடேன்புண்ணியந்தன்னில்
நீடேன்உனதருளைத்-தேடேன்உனதுபுகழ்
பாடேன்அநுதினங்கொண்டாடேன்-பதமலரைச்
சூடேன்அருவினையைச்-சாடேன்சுரர்புகழும் ஏகா.

௩. நாதாதிவ்யவரப்பிர-சாதாஅகண்டசமு
தீதாநினைவினுக்-கதீதாஅடியர்கள்ச
மேதாநிலைகொள்பஞ்சபூதா திரிகர்மவி
நோதாதினந்தினம்-வேதநாயகன்புகழ். ஏகா.



### 123-இராகம்-மோகனம்-ரூபகதாளம்.

பல்லவி.

இன்னம்பராமுகமாமோ-வினை
யின்னருள்தானின்றிப்-போமோ

அநுபல்லவி.

மின்னல்உறுபுகழ் நன்னலமேவிய
வேதார்த்த-கன-போதார்த்தா-ஓ (இன்)

சரணங்கள்.

1. வன்பிழைஒப்புக்கொண் டாலே சூதமை
மன்னர்செய்வார்புவி மேலே
என்பிழையைப்பல காலே ஒப்பி
னேனேமுனிவேதென் பாலே
அன்பெனும்தெப்பம் இல்லாமல்வினைக்கடல்
ஆழ்ந்தேனே-துயர்-சூழ்ந்தேனே-ஓ (இன்)

2. தன்பதியைப்பகை யோரே கொள்ளத்
தான்பார்த்திருப்பவன் யாரே
நின்பதிஎன்மதி தேரே அதில்
நீங்காமல்உன்கண்முன் நேரே
உன்பகையோரெனும் காமக்குரோதிகள்
உற்றாரே-ஜெயம்-பெற்றாரே-ஓ (இன்)

3. நெஞ்சங்கவலைக்கு வீடா
நின்சோதனைக்குநான் ஈடா
அஞ்சாதேநீஇங்கு வாடா என்
றருளாதின்னவேறு பாடா
தஞ்சமெனவேதநாயகன் போற்றிடும்
தாதாவேபெற்ற-மாதாவே-ஓ (இன்)



### 124-இராகம்-உசேனி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஏகநாதா அரும்பர போகம்நீதா

அநுபல்லவி.

பாகவிகசித கற்பகாரண்ணிய
பதிதபாவன பரமகாருண்ணிய (ஏக)

தேகம்பிறைபதி ரூபலாவண்ணிய
தியர் தமைச்சிக்ஷை செயும்நிர்த்தாக்ஷிண்ய

சரணங்கள்.

1. நாளுமுழ்கினன் பாபஅங்கணம்
நாடினேன் பெரி யோர்கள்வங்கணம்
ஆளும்படி தரித் தனைநீ கங்கணம்
அன்போடெனைச்சேர் நல்லோர்கள் தங்கணம்
நீளும்அகண்டித மாகியோங்கிய
மாளுந்தொழிலுறு மாசுநீங்கிய (ஏக)

2. அடியன் மீதுனக் கென்னபிணக்கமே
அகற்றுவாயென தகங்கள்உனக்கமே
நெடியநின்பத மலர்க்குவணக்கமே
நிதமும்நான்செய்ய அருள் நல்லிணக்கமே
கடியதுயர்கடல் கடக்கஉனதிணை
அடியலாதினி அயலுண்டோபுணை (ஏக

3. உதிர்க்கும்பலகதிர் நிகரும்விதுரனே
உயிர்நித்தியானந்த நகரச்சதுரனே
துதிக்கத்துதிக்கவே இனிக்கும்மதுரனே
சூழும்சிவராசிகள் தம்பிதிரனே
குதிக்கும்மாயையைக் கொன்றுதாழ்விக்கும்
மதிக்கும்வேதாயகனை வாழ்விக்கும் (ஏக)



125-இராகம்—புன்னாகவராளி—ரூபகதாளம்.

பல்லவி.

தயைபுரியே எனதுளத் துயர்பிரியே (தயை)

அநுபல்லவி.

உயரும்தர்மசம் வர்த்தனு
உத்தமார்தம்மன நிர்த்தனு
கடவர்இழிகுல மர்த்தனு
கருதருபுண்ணிய யத்தனு (தயை)

சரணங்கள்.

௧. புண்ணியம்நாயேனுக் கெட்டி
பொய்களெல்லாம் வெல்லக்கட்டி
திண்ணியமெய்ஞ்ஞான திட்டி
சிறிதீயில் என்னநட்டி
சின்மயமே மெய்வேத நன்மயமே எனையுறு
உன்மெய்ப்பதந்நாட கன்மப்பயிர்வாட (தயை)

௨. என்குறை பாராட்டாதே
இன்னம்என்னை வாட்டாதே
நின்சோபங் காட்டாதே
நிபங்கள்என்மேற் சாட்டாதே
நிச்சயமேநிலைபெரும் அசூயமே கனமுறு
நேசத்திடம்ஓங்க பாசத்திடும்நீங்க
மாசற்றறம்வீங்க வாசத்தகைதாங்க (தயை)

௩. அண்டசராசர ரூபா
அகதிகளுக் கருதாபா
விண்டலமண்டல பூபா
வேதநாயகன் லாபா
விண்மணியே எனதிரு கண்மணியே பழிசெய்யும்
வேகப்பவமோட்டி மோகப்பகைவீட்டி
பாகப்பதம்நீட்டி யோகப்பதிகாட்டி (தயை)



126 இராகம்-ஜங்கலா-ரூபகதாளம்.

பல்லவி.

நல்லவரந்தந்தாளுவாய்
நாதனே அபேதனே

அநுபல்லவி.

அல்லும்பகலும் உன்னைநாட
அற்புத பரமார்த்தந்தேட (நல்ல)

சரணங்கள்.

1. அன்பருடனேகூடவும் அநுதினம்துதிபாடவும்
இன்பசாகரம்ஆடவும் ஈனரைக்கண்டால்ஓடவும் (நல்ல)

2. பஞ்சப்புலனை அடக்கவும் பாவக்கடலைக்கடக்கவும்
நெஞ்சம்ஒடுங்கிக்கிடக்கவும் நீதிநெறியில்நடக்கவும் (நல்ல)

3. தீனர்களையேதாங்கவும் சிந்தைத்துயரம்நீங்கவும்
ஞானவழியில்ஓங்கவும் நானுன்அடியில்தூங்கவும் (நல்ல)

4. பத்தர்பாவுக்தேவனே பாமதிவ்பசுபாவனே
வித்தகமனோபாவனே வேதநாயகன்ஜீவனே (நல்ல)



## 1?7-இராகம்-பூரணச்சந்திரிகை-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்தான்பாராமுகமோ இதுதருமோ ஸ்வாமி

அநுபல்லவி.

சந்நிதான தரிசனம் அருளாமல் (இன்ன)

சரணங்கள்.

1. செந்தாமரைப்பதமே சேரேன்நானிதமே
நொந்தேன்பலவிதமே நோய்தீர்த்தருள்ஹிதமே
சிந்தைதனிற்பிரமை கொண்டேன்
தீமைகள்செய்து கைகண்டேன்
சந்ததமும்நலம் விண்டேன்
சஜ்ஜனசங்கமும் அண்டேன் (இன்ன)

2. பூண்டேன்அபசரிதம் புகழேனின்சரிதம்
ஆண்டோய்என்துரிதம் அறவேசெய்துரிதம்
நீண்டபெருந்தனை பூணேன்
நீதிதனையுமே பேணேன்
மூண்டபெரும்பழி நாணேன்
முத்திபெரும்வழி காணேன் (இன்ன)

3. அடியார்திரவியமே அமலோதயஸ்வயமே
வடிவார்ஆலயமே வளர்தேஜோமயமே
திடமுறு புவனுதாரா
தினகரகோடி சரீரா
விடயமுறு அதிகாரா
வேதநாயகன் உபகாரா (இன்னம்)



128-இராகம்-பிலகரி-ரூபகதாளம்.

பல்லவி.

கருணாலயநிதியே-தினமும்உன்
சரணம்புயம்கதியே (கருணாலய)

அநுபல்லவி.

சருவபேதவிநோதகாரண
பரமசாதகபதநிவாரண (கருணாலய)

சரணங்கள்

1. நிதம்வெளுக்க வெளுக்கவெண்தூசு
நிமிஷத்தோறும் நிறையுமேமாசு
அதுபோல்எந்தன் அகமுறும்ஆசு
அகலவேஉன் அருள்ஒளிவீசு
அகிலகோடி விசாலகற்பித
சகலஜீவதயாள அற்புத (கருணாலய)

2. இங்கென்செய்கைகள் யாவும்நிகிர்ஷ்டம்
எனக்குப்புண்ணியம் என்று அநிஷ்டம்
பங்கம்தீர்க்கில் உனக்குண்டோநஷ்டம்
பரமனேயருளாயோ உத்கிரிஷ்டம்
பாரமாகவே பண்ணும்பாதகம்
தீரவேநீசெய்வை சாதகம் (கருணாலய)

3. அமலபாஸ்கரா கோடிசொரூபா
அகண்டசச்சிதானந்த பிரதாபா
நிமலவேத வேதாந்தநிரூபா
நிர்விகற்ப நிரஞ்சனதீபா
நீதபூரண நிலயமஞ்சித
வேதநாயகன் இதயரஞ்சித (கருணாலய)

---

129-இராகம்-அமீர்கல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

நாதாகிடையாதா வரமேகஜகநாதா.

அநுபல்லவி.

பாதாரவிந்தம்நம்பும் பாவியைமேதாவியாக்க நாதா

சரணங்கள்.

1. எந்தநாளுமுடர்விர்த்தி இல்லையேதிரிகரணசுத்தி
மந்தமானஎன்துர்ப்புத்தி மாறவேஅருளாயோசித்தி நாதா

2. அவமெனுமதயானைஎன்வசம் ஆகவேபருள்ஞானஅங்குசம்
சுகதுக்காதிகளில்சமரசம் தோன்றவேஅருள்வாய்தயாரசம் ()

3. அபயவரதகரநிர்வாக ஆபத்பாந்தவஅருட்பிரவாக
விபவசார்வசௌமயோக வேதநாயகன்ஸ்வாநுபோக நாதா



130-இராகம்-அபூர்வம்.

பல்லவி.

சருவவிநோதா திருவருள் தாதா-சருவ

அநுபல்லவி.

இரவுபகல் உனதிணையடிநாடவும்
தருமநிர்மலசுக சாகரம் ஆடவும் சருவ

சரணங்கள்.

1. பசிதாகசோகரோக பாபசரீரம்
கசிவுறுமலஜல காமபண்டாரம்
சுசிஅறும்இதில்வினை தோஷம்அபாரம்
நிசமயனே அருள் நீபரிகாரம் சருவ

2. கடல்நடுவேகரை காணுதகாகம்
இடர்உறல்போலவே எனதுயிர்வாகம்
மடம்அறஅருள்செய்நிர் மலபரிபாகம்
கடவுளேநாடினேன் கருணைப்பிரவாகம் சருவ

3. சுரகணசேவித துரிதவிநாசன
சருவதயாபர சாபவிமோசன
கருமநிவாரண கருணாவிலோசன
வரவேதநாயகன் மனகமலாசன சருவ



131-இராகம்-சரசாங்கி-ரூபகதாளம்.

பல்லவி.

எத்தனைகவிபாடினும் பலன்ஏதுமில்லையே எத்தனை

அநுபல்லவி.

சித்தம்வாக்குக்கிரியை அத்தனையும்தினம்
உத்தமமார்க்கத்தில் ஒத்துநில்லாமல் எத்தனை

சரணங்கள்.

1. சந்ததமுட் பரன் சுந்தரபாதத்தை
அந்தரங்கந்தனில் சிந்தனைசெய்யாமல் எத்தனை

2. மோசஞ்செயும்ஆசா பாசங்களென்னும்பி
சாசந்தனைச்சர்வநாசஞ்செய்யாமல் எத்தனை

3. கோபம்பொறாமைபொய் லோபம்மதமுதற்
பாபங்கட்கேமனஸ் தாபங்கொள்ளாமல் எத்தனை

4. மும்மலபாசத்தை நிர்மூலமேசெய்து
நிர்மலசித்தனுப் தர்மம்செய்யாமல் எத்தனை

5. தாயகனுப்வேத நாயகன் தீனர்ச
காயன் தனைநெஞ்சுள் நேயம்பண்ணுமல் எத்தனை

---

132. இராகம் ஹம்சத்தோனி ஆதிதாளம்

பல்லவி.

ஞானேதயவரம் அருளே.

அநுபல்லவி.

பானேதயபரம்பொருளே ஞானே

சரணங்கள்.

1. மாயாவிகாரஜெகமே தேயாமல்அருள்சுகமே
தூயர்நேசனே ஸ்வயம்பிரகாசனே
தீயர்நாசனே சிக்விலாசனே ஞானே

2. தேகாபிமானம்அறவே யோகாநுசாரம்உறவே
பாகம்நீட்டுவாய் பாதம்நாட்டுவாய்
மோகம்ஓட்டுவாய் முத்திகாட்டுவாய் ஞானே

3. ஆகாரம்ஏதுமில்லையே பாதாரவிந்தம்நில்லையே
போததாயகா புண்ணியஆயகா
வேதநாயகா விமலதூயகா ஞானே

---

133-இராகம் தீரசங்கராபரணம் ரூபகதாளம்

பல்லவி.

ஆதிமூலனே நீதிநூலனே நித்திய ஆதி

அநுபல்லவி.

வேதபோதசாதகம்பெற நீதயைபுரிவாய்-நித்ய ஆதி

சரணங்கள்.

1. திட்டமாகமாயைக்கே அஷ்டதிக்கும்விஜயமாநான்
துஷ்டன்ஆதலால் உனக்கும்என்கிட்டவரப்பயமா
கெட்டஇதயமே அதில்கஷ்டம்உதயமே
சிஷ்டரோடெனைக்கூட்டிஞானநிஷ்டன் ஆக்குவாய்நித்திய ஆதி

2. துணைஉன்பாதஇணையலாது சொல்லவேறுண்டோ
இணையிலாயொருதினையிலாய்தெய்வம்எனக்குத்தான்இரண்டோ
குணம்தருவாயே அருள்மணம்தருவாயே
உணரொண்ணாதனினதுசேவைபுணரவே அருள்வாய்நித்திய ஆதி

3. பனையைச்சுத்தஞ்செய்தினிதுறல் மனிதர்க்கும்சகசமே
நினதகமெனும் எனதுநெஞ்சம்நிதமலவசமே
புனிதம்செய்வாயே அதில்இனிதமாவாயே
நயன்வேதநாயகனுக்கும் தரிசினமருள்வாய்நித்ய ஆதி

---

134 இராகம்பியாகு ரூபகதாளம்.

பல்லவி.

பிக்ஷை அருளாயோ ஞான பிக்ஷை

அநுபல்லவி.

அக்ஷயநிர்மல லக்ஷணனே ஜீவ
ரக்ஷணனே அதிபக்ஷமுடன் ஞான பிக்ஷை

சரணங்கள்.

சத்தியமாறுதபுத்தியும்ஓயாத
பத்தியுமெஞ்ஞான சித்தியுமுத்தியும் பிக்ஷை

2. நேசருடன்சக வாசமும்ஞானப்பிர
காசமும்என்விசு வாசமும் பிக்ஷை

3. தானம்பொறை அருள் ஞானம்இதராதி
மானம்நிதானமும் மோனமுந்தியானமும் பிசைகூத

4. பூதமெல்லாம்விபரீதம்உருமலே
ஆதரவுசெய்யும் வேதநாயகனே பிசைகூத

---

135. இராகம் சௌராஷ்டிரம் சாப்புதாளம்

பல்லவி.

இந்தமனம்கெட்டதையா
பந்தவலைப் பட்டதையா இந்த

அநுபல்லவி.

சந்ததம் புண்ணியந்திரண்ட
சுந்தரதேகா நான்கொண்ட

சரணங்கள்.

1. சொன்னபடி கேளாச்சண்டி
தோஷமுட்டை தூக்கும்பண்டி
உன்னிடம்வரவே நொண்டி
ஓடும்விஷயத்தை அண்டி இந்த

2. இதரர்வாழக்கண்டால் வாட்டம்
எவருங்கெட்டாலோ கொண்டாட்டம்
மதனநெருப்புக்குக் காஷ்டம்
வாயுவினும்வேகம் ஓட்டம் இந்த

3. சுகதுக்கபேதம் போதிக்கும்
சூழ்நலமெல்லாம் பேதிக்கும்
பகல்இரவென்று சாதிக்கும்
படுவிஷம்உண்டு சோதிக்கும் இந்த

4. காடுங்கரையும் சஞ்சாரம்
காமப்பசாசுக் காகாரம்
நாடும்பிரபஞ்ச வியாபாரம்
ஞானம் இதற்கெட்டாத் தூரம் இந்த

5. பாதகங்கட்கெல்லாம் குரு
பாசம்விளைவிக்கும் எரு
ஏதுவில்லா விஷதரு
எனக்கனுகூல சத்துரு இந்த

6. பஞ்சபூதாதி நிர்மாணு
பக்தர்கள் இதயவாணு
விஞ்ஞையாம் சாஸ்திரபுராணு
வேதநாயகப் பிரமாணு இந்த



136. இராகம் மனோகரகம் திரிபுடைதாளம்

பல்லவி.

எந்தையேஎனக்கும் அடியேனுக்கும்
எத்தனை பேதம்ஐயா எந்தை

அநுபல்லவி.

சந்ததசர்வ சாம்பிராஜ்ய பிரபுத்துவ
சாசுவததேவதேவ மகத்துவ எந்தை

சரணங்கள்.

1. தேவனீசகல புவனேசன்
சிறியனான் உந்தன் தாசானுதாசன்
காவலனானநீ ஸ்வயம்பிரகாசன்
கசடனான் அந்த காராப்பிரவேசன் எந்தை

2. சத்தியமாக நீதர்மசொரூபி
தாரணிமீதிலே நான்பெரும்பாபி
நித்தியனான நீசுத்த அரூபி
நிச்சயமாக நான்மெத்தக்குரூபி எந்தை

3. சமமில்லாதநீயே மலரகிதன்
சாமிநான் உலகில் மலசகிதன்
விமலனேநீபல பிராணிகள்விகிதன்
வேதநாயகனேநான் எவர்க்குமேஅகிதன் எந்தை



## காலைஸ்தோத்திரம்.

---

### 137. இராகம் தேசிகதோடி ஆதிதாளம்.

பல்லவி.

உனக்கேநமஸ்காரமையா இடர்
ஒன்றும்வாராமலே நன்றுசெய்தாயே உனக்கே

அநுபல்லவி.

தனக்கோர்நிகர் என்றுமிலாத
தயாகாரனை பராபரனே உனக்கே

சரணங்கள்.

1. நேத்திரங்களைநீயெம் மாத்திரமுமூடாமற்
காத்திருந்தாயெனை இராத்திரிமுழுதும் உனக்கே

2. சத்துருபயமின்றி நித்திரைசெயவெனைப்
பத்திரமாயுன்கையில் வைத்திருந்தாயே உனக்கே

3 முந்தும்அரவம்விஷ ஜெந்துக்களால்அபாயம்
வந்துகெடாமலேகா பந்துசெய்தாயே உனக்கே

4. தீயும்வெள்ளமுங்காற்றும் பேயும்விலங்கும்பல
நோயும்வாராமற்காத்தாய் தாயுந்தந்தையும்போல் உனக்கே

5. நாங்களோர்தடையின்றித் தூங்கஇராமுழுதும்
வீங்கிருட்போர்வைதனைத் தாங்கிநின்றாயே உனக்கே

9. இருட்டுமொழிவிடியும் பொருட்டுநீபுவிதனை
உருட்டிஇராமுழுதும் புரட்டிநொந்தாயே உனக்கே

7. பூதநாயகனேபிர போதநாயகனே
கீதநாயகனேநல் வேதநாயகனே உனக்கே



## 138. இராகம்- மாஸ்-ஆதிதாளம்.

### பல்லவி.

சருவஜீவாதாரபரனே நமஸ்காரம் சாக்ஷாதீவகனேநின்
தயவினுக்களவிடொண்ணுதே பரிஸ்காரம்

### அநுபல்லவி.

கருணும்பரகுண கர்த்தவ்யனே ஞான
திருவிலாசமறையின் தெளிவே பூரணத்யான சருவ

### சரணங்கள்.

1. எந்தத்ததியினிலுங் காத்தருள்புரிதேவே
எல்லாமுணர்ந்தருளியும்
ஏகவைபோகனே மாசிலாமெய்க்கோவே
சந்ததம்வந்தடுக்கும் நிந்தையனேத்துந்தீர்த்த
சுந்தரசகுணமலி துய்யநின்விழிபார்த்த சருவ

2. பாழுலகிடுத்தெந்தனை வாதித்திடுங்கோரம்
பரிபூர்ணக்ருபைபாலித்து
பாதுகாத்தருளதை தந்தேயுபகாரம்
தாழும்படிசெய்பல சதிசற்பனைகள்தாளும்
தானடையாமலாண்டாய் தயவதுவோவிலாசம்

3. இருளதுமாறிதிங்க ளவன்ஒளியைத்தரவே
இமையது மூடாமற்காத்தனை
இடர்தரும்சத்துருவோடுபேலவிஷம் அண்டாமற்காத்தஇறையே
கருத்துக்கெட்டாததெல்லாம் கருதிசிந்தனைசெய்த
கனசுகமேமெய்வாழ்வே கலங்காதெனக்குள்உய்த சருவ

4. வாதும்பற்பலசூதும்காதக மெல்லாம்துரந்த்ரா
வள்ளலாய்க்கிருபைக்கண்பார்த்த
மாசிலாதபரனே வல்லவனேநிரந்த்ரா
வேதநாயகன்மனம் போதநாயகனேதுதி
விபூதர்ப்பரவிதொழும் விமலனேயருள்கருதி சருவ

139. இராகம் தோடி ஆதிதாளம்.

பல்லவி.

ஆளாயோ என்னையே நம்பினேன் கெடு
நாளாக உன்னையே — ஆளா

அநுபல்லவி.

நீளும்புவனாதாரா நேயருக்குபகாரா
நிகரறும்இகபர சுகமருள்வரதா
அகம்அறுசுகுணர்கள் புகழ்அநவரதா — ஆளா

சரணங்கள்.

1. எதுகைனபதங்களுக் கெடுப்பேன்கற்பனைநிதம்
எல்லாஞ்செலவாய்ப்பாட்டுக் கினிமேல்இலை ஆஸ்பதம்
அத்தனேஇரங்கிநீ அருள்வாய்பரமபதம்
அன்றேற்பழம்பாட்டன்றி அறியேனான் புதுப்பதம்
அல்லல்வினையகல நல்லவாக்குக்கெனை ஆளுவாய் அகு
தல்லவெனிற்பதங்கள்சொல்ல நல்வாக்குதவிமுளுவாய்கன
அகணித-சுகுண பிர-முக பரமேசா
ஜெகமயல் அகமெய் திகழ்உபதேசா — ஆளா

2. கனியிலால்மரத்துக்குப் பலனுண்டோ அதுபோல
காசினிமீதடியேன் பேசினதினாலே
இனியபயன் பிறருக் கியினும்அதனாலே
எள்ளளவுநலந்தான் எனக்குண்டோ புவிமேலே
இலக்கஅந்நூலின் பிசைவிலக்கியதுர்க்குணங்கள்யாவுமேவெகு
கலக்கமுறஎன்மனமலர்க்கண் அநுதினமுமேவுமே எங்கன்
இதய மதயமலை முதல் அறநீக்கி
நிதம்நிதம் உனதிரு பதமலர்நோக்கி — ஆளா

3. ஓங்ககிலாண்டகோடி தாங்கிடும்பரிசன்னியா
உத்தமமூர்த்திகர சுத்தபிரமசைதன்னியா
நீங்கருமாமகிமை வீங்கிவளர்சௌஜன்னியா

நீதநெறிநிலகுபாதகம் அற அற அருளூட்டுவாய் பெருங்
கோதகல் இகபரசாதக ஞானநிலைகாட்டுவாய் அரு
நிதிபர கதியெனும் விதிஉபதேசா
துதிசெய் வேதநாயகன் மதிஅமர்நேசா ஆளா



## 140. இராகம் பைரவி அடதாளம்.

பல்லவி.

நெடுநாள்நம்பினேனையா நீனிலத்திலுந்தனைமெய்யா
நின்னருள் புரிந்தாளையா
நிபுணருளத்தோங்கும் நித்தியானந்தபரனே
நித்திரையினுமறவா பக்திகொண்டேன்கரனே நெடு

அநுபல்லவி.

புடவியுமுளவியாவும் புரந்தவனேபெய்போதா
புகலொணாஞானமிழ்தே பூசுரர்துதிநாதா
திடமுஞ்செய்வாதனைத்துந் தீர்த்திடுவோனேநீதா
தினமும்நின்கழலை சிந்தித்தேன்தெரியாதா நெடு

சரணங்கள்.

1. கருணைவாரிதியோமா காருண்யசீலனே
ககனமெல்லாம்பணிசெய் கழுமறைநூலனே
அருளோதயனேசுக்ர அபரஞ்சிகமூலனே
அழகுநின்பதங்காண ஆசைகொண்டேத்யாலனே நெடு

2. எல்லோரும்உணர்ந்தேனீயே எங்கும்நிறைந்தநீயே
இயாவும்சிருஷ்டித்தோனீயே என்னுளத்தோனும்நீயே
வல்லபபராப்பொருள்நீ மயல்தவிர்ப்போனும்நீயே
மஞ்சுரும்பதங்காண மகத்வஆசையும்நீயே நெடு

3. வேதநாயகன்மன வியாபகனேவிநோதா
விண்ணவர்பரவிய விமலனேகுணநீதா
பாதமேகதியென பற்றியனந்தகாலம்
பணிந்தேன்நினைந்தேன் திவ்ய பரனேவிசாலம் நெடு

## ஈசுரவருடத்துப் பஞ்சத்தைப்பற்றிப்பாடியது.

141 இராகம் உசேனி திசிரஜாதி மட்டியதாளம்

பல்லவி.

பஞ்சம்தீர்ஐயா உனையன்றித்
தஞ்சம்ஆர் ஐயா பஞ்சம்

அநுபல்லவி.

வஞ்சகமேகம் உலோபர்கள்போலே
மண்ணில்மழை பொழியாமையினாலே
சஞ்சலமாகித் தளர்ந்தோமெண்மேலே
சாமிகதிஉந்தன் தாமரைக்காலே பஞ்சம்

சரணங்கள்.

1. எட்டுநாள்பத்துநாள் பட்டினியோடே
இடையிலேகந்தை இருகையில்ஓடே
ஒட்டிஉலர்ந்தஉடல் என்புக்கூடே
ஒருகோடிபேர்கள் வசிப்பதுகாடே
ஊரும்இல்லாமல் குடிக்கத்தண்
ணீரும்இல்லாமல் அன்னமேனும்
பேரும்இல்லாமல் பசிதீர்க்க
ஆரும்இல்லாமல்
பாரில்அனேகர் பரதேசிஆனாரே
ஊரில்அனேகர் உயிர்மாண்டுபோனாரே பஞ்சம்

2. தாரங்களையே புருஷர்கைவிட்டார்
தந்தைதாய்பிள்ளைகளை விலைவிட்டார்
வேறும்இலையுங்கிழங்கும் சாப்பிட்டார்
வெறுங்கையராய்வெளியே புறப்பட்டார்
வேலியும் அற்றார் பெண்சாதிகள்
தாலியும்விற்றார் வேலைசெய்து
கூலியும்பற்றார் பலபல
சோலிகள்உற்றார்
தோலும்எலும்புமாய்த் தோன்றியேசோம்பினார்
பாலரும்தாய்முலைப்பால் அற்றுத்தேம்பினார் பஞ்சம்

3. பஞ்சம்இதுபோலக் கண்டதில்லையே
பலபேர் அடுப்பில் வையார்கள்உலையே
நஞ்சம்போல்நாட்கு நாள்ஏறும்விலையே
நாங்கள்படுந்துன்பம் நானூறுமல்லையே
நார்கள்மெய்வாடி மனமிக
உருகித்தள்ளாடிக் கண்ணீர் ஆறாய்ப்
பெருகியேஓடிப் பிக்ஷைகேட்க
வருபவர்கோடி
இரவுபகல்எங்கும் ஏழைகள்சத்தமே
பரனேகலியொடு பண்ணினார்யுத்தமே பஞ்சம்

4. ஏரிகுளம்நதியாவும் நீர்சுண்ட
ஏகமாக்கோடைக்கனல் எங்குமண்ட
சேரிமாடாடுகள் செத்துப்போய்வெண்ட
ஜெகமுழுதும் உதராக்கினி அண்ட
தீனர்கள்நாட அவர் களை
ஈனர்கள்ஜாட தங்கள்சுத
வானதைமூட அதுகண்டு
மானிகள்வாட
மேனிகுலைந்து மெலிந்தாரே இப்படி
கோன்உனையன்றிக்குடியாவதெப்படி பஞ்சம்

5. மண்ணில் அநேகர் என் கண்ணின்முன்மாய்ந்தார்
மரஞ்செடிபுல்லையு மாடுபோல்மேய்ந்தார்
எண்ணில்லாப்பேர்கள் சருகுபோற்காய்ந்தார்
இளைத்துக்களைத்துத் தவித்துடல்ஓய்ந்தார்
ஏங்கிடுவாரும் களைகொண்டு
தூங்கிடுவாரும் அன்னம்உண்ண
வாங்கிடுவாரும் உடன்உயிர்
நீங்கிடுவாரும்
ஈங்கிந்தவண்ணம் இருண்டதுமேதினி
தாங்கும்வேதநாயகா தஞ்சம்ஏதினி பஞ்சம்



## ஹிதோபதேசக் கீர்த்தனைகள்.

## கடவுளைத் தியானிக்கும்படி வற்புறுத்தல்.



### 142-இராகம்-குந்தளவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநீ-ஈசனுமத்தைவாழ்த்துவாய்-தினம்
வாழ்த்துவாய் (மனமே)

அநுபல்லவி.

அனவரதமும்நீ அரும்பதம்பாடிக்
கனசுகமேவிடக் கலந்துகொண்டாடி (மனமே)

சரணங்கள்.

1. வம்புவார்த்தைகளே பெரும்பாவம்
வாய்க்குச்சேதமல்லால் என்னலாபம்
எம்பிரான் திருமகிமைப் பிரதாபம்
எடுத்துப்பேசுவது சத்காலக்ஷேபம் (மனமே)

2. ஏகமாக உள் ளுருகிமேயபரிய
இருகண்ணானந்த பாஷ்பங்கள்சொரிய
தேகபரவசமா தாயன்புவிரிய
சிரகாதிகள் அஞ்சலிபுரிய (மனமே)

3. கரும்புதின்னக் கைக்கூலியும் ஏனே
கற்கண்டோ அமுதோ பசுந்தேனே
விரும்பும்பிரமானந்த மேயது தானே
வேதநாயகன்பேர்க் கிணைசொல்லநானே (மனமே)

## இதுவும் அது.

### 143-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநீமறவாதே-ஐயன்பதத்தை (மனமே)

அநுபல்லவி.

கனவிலும் நிதமுறு நனவிலும்பலபல
நினைவிலும் ஒழியாமல் அனவரதமுமே (மனமே)

சரணங்கள்.

1. மண்ணுஞ்சராசரமும் விண்ணும்படைத்தளித்தழிக்கும் பராபரன்தன்
வண்ணமலர்ப்பதத்தைக் கண்ணும்பொழுதில் இன்பந்தேக்கும் ஆகையினாலே
உண்ணும்பொழுதும்வேலை-பண்ணும்பொழுதும்-ஒன்றை
எண்ணும்பொழுதுந்துன்பம்-நண்ணும்பொழுதுமே (மன)

2. கல்லும்பெருமரமும் புல்லும்புனமுமேசஞ்சாரம் செய்யுமந்திபோல்
தில்லும்புல்லும்திரியா வரமுஞ்செய்தென்னசாரம் வெளியிலேதான்
செல்லும்பொழுதும்வார்த்தை-சொல்லும்பொழுதும்-பகை
வெல்லும்பொழுதும்-பின்னும்-அல்லும்பகலுமே (மனமே)

௩ அஷ்டதிசையும்ஓடிக் கெட்டலைந்தோம்புவோம்சரீரம் இருப்பிடத்தை
விட்டகலாமல் தியானநிஷ்டை செய்வதில் என்னபாரம் பலவியாதி
குஷ்டம்வந்தாலுந்-துரைப்-பட்டம்வந்தாலும்-பெரும்
கஷ்டம்வந்தாலும்-பிறர்-வெட்டவந்தாலுமே (மனமே)

4. கெடுக்கும்பவவினையை ஒடுக்கும்வேதநாயகனுமம் துயர்வராமல்
தடுக்கும் இகபரமுங் கொடுக்குந்தினமும் உண்டுக்ஷேமம் நித்திரைசெய்யப்
படுக்கும்பொழுதுந்-துகில்-உடுக்கும்பொழுதும் ஒன்றைத்
தொடுக்கும்பொழுதும்-சுகம்-அடுக்கும்பொழுதுமே (மனமே)

## இதுவும் அது.

### 144-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இனியாகிலுமனமே-ஐயனை நீ-நினையாயோதினமே
இகபரசித்திபெறவே. (இனி)

அநுபல்லவி.

தனியிளம்பருவமுந் தாண்டிப்போனதே
பனிபோல்வளர்ந்து கிழப்பருவமானதே (இனி)

1. ஆசைக்கொருகறுப்பு மயிரேனும்இல்லையே
ஐயையோகொக்குப்போல் நரைத்ததுதலையே
காசுக்குதவாக்கிழ மென்பதுநில்லையே
கன்னியர்க்கும்இனிநாம் கசக்கும்வேப்பிலையே (இனி)

2. கண்கள்இரண்டும் மூக்குக்கண்ணாடிதேடும்
காலூசலாடும்ஓர் கழியைக்கைநாடும்
தண்கொள்ளும்வேரற்றுத் தந்தங்கள்ஆடும்
தடுத்தாலும்நில்லாமல் யௌவனம்ஓடும் (இனி)

3. பசிவந்தபின்னெல்லை விதைப்பதுமதியோ
படுந்தாகம்வந்தபின் வெட்டுதல்நதியோ
விசயஞ்செய்திடச்சாகுங் காலமேததியோ
வீணேயுனக்குக்கெட்டுப் போகச்சம்மதியோ (இனி)

4. காலன்தனக்கென்ன செய்தோம்அபகாரம்
கணத்தைஆயுளைஅற தினஞ்செய்யுஞ்சோரம்
மேலும்மேலும்உடலில் விளைக்கும்விகாரம்
வேதநாயகன்சொல்லே வேதாந்தசாரம் (இனி)

---

## 145-இராகம்-சஹாணு-ஆதிதாளம்.

பல்லவி.

மறவாதே-கருணாம்பரனடியிணை-மறவாதே
மாசிலாதபரனை-நேசக்ருபாகரனை (மறவாதே)

அநுபல்லவி.

நிரந்த்ரநிராதார நின்மலவடிவினை
நித்யானந்தவாழ்வினை நிகரில்முடிவினை

சரணங்கள்.

1. பஞ்சவேடர்மயலில் தஞ்சமென்றேபுகுந்து
சஞ்சலமாம்பிறவி தன்னில்உவந்து (மறவா)

2. உலகவ்யாபாரத்தில் உன்மத்தம்போலலைந்து
நலமிலாகுணத்தினை நாடிமதிகுலைந்து (மறவா)

3. சகலசுகுணமலி சாஸ்விதபதந்தள்ளி
மக்கலந்தகன்போல்துள்ளி பந்தவானைகையள்ளி (மறவா)

4. நிமைமூடாமல்காக்கும் நிமலடியைத்தேக்கும்
சுமையாய்பிறவிபோக்கும் சுத்தமனத்தனுக்கும் (மறவா)

5. பாதகம்நிறைவாழ்வை பற்றிமயலோகொள்ளி
வேதநாயகன்குண வியாபகனைத்தள்ளி (மறவா)



## துர்க்குணங்களை வெளியிடல்.

146-இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

நெஞ்சே-இந்தநாடெங்குந்தேடினும்
நீசர்நமைப்போலுண்டோ

அநுபல்லவி.

அஞ்சாமல்நாளும் அகந்தைகள்நீடுவோம்
சஞ்சலப்பேயால் தலைசுற்றிஆடுவோம் (நெஞ்சே)

சரணங்கள்.

1. தேகம்உயிர்முதல் யாவையுமேதந்த
தேவன்தனைமறப்போம்-கரு
மேகநிழல்போல் மறையும்பொய்வாழ்வை
விரும்பிநலந்துறப்போம்
மோகவிகாரத்திலே தடுமாறுவோம்
முன்னொன்றும்பின்னொன்று மாகப்பொய்கூறுவோம்
ஏகமாய்எங்கும் பிறர்களைத்தூறுவோம்
எப்படிஐயையோ நாங்கரைஏறுவோம் (நெஞ்சே)

2. கோயில்குருக்கள் ஜெபதபம்யாவும்
கொடுவிஷம்போல் வெறுப்போம்-தினம்
நேயமதாகவே தூயமறைசொல்லும்
நீதிகளைமறுப்போம்
ஆயிரம்பாவம் அடிக்கடிபண்ணுவோம்
அன்னியமாதரை ஆசையாய்எண்ணுவோம்
யாஉலோபகுணத்தையே நண்ணுவோம்
ஏழைபசியோடிருக்காமுண்ணுவோம் (நெஞ்சே)

3. உள்ளபடிநமக் கெள்ளளவென்கிலும்
உத்தமம்தான் இல்லையே-பாவ
வெள்ளம்நிறைந்திடும் பள்ளந்தனிலே
விழுந்துகெட்டோம் நிலையே
வள்ளலைப்போல்வெறு மாயக்கூத்தாடுவோம்
வந்தஎளியர்க்கு வாசலைமூடுவோம்
உள்ளேபகையும் உதட்டன்பும்நீடுவோம்
ஊரைஅடித்தே உலையிலேபோடுவோம் (நெஞ்சே)

4 உற்றகலையெல்லாம் கற்றமெஞ்ஞானிபோல்
ஊரைமயக்கிடுவோம்-பழு
தற்றமெஞ்ஞானத்தில் பற்றுதலின்றி
அலையஉடம்படுவோம்
மற்றவரைக்கெடுத்துப் பழிவாங்குவோம்
வாழ்வோரைக்கண்டால் வயறுப்பிவீங்குவோம்
நற்றவஞ்செய்யாமல் நாளெல்லாம்தூங்குவோம்
நல்வேதநாயகன் பாதத்தைநீங்குவோம் (நெஞ்சே)

---

147-இராகம்-பியாகு-அடதாளம்.

பல்லவி.

பாழ்மனமேயுன்னைப் போலொருபேதை
பாரில்காணேனே-உன்தந்த்ரம்
பற்றும்வேணேனே (பாழ்)

அநுபல்லவி.

வாழ்நாளனைத்தும் வீணிற்கழித்து
மமதைப்பூண்டாயே தினம்
சூழ்ந்துமேகொல்லும் பஞ்சவேடரின்
சிலைத்தி னீண்டாயே வழுவி
தீதில் மாண்டாயே ஐயோ (பாழ்)

சரணங்கள்.

1. பொய்க்குருக்கள்போல் போதனைசெய்து
புகழ்ச்சிகொண்டாயே உனக்குள்
புத்தியைநிலை நிறுத்தாமலேவீண்
புன்மையில் நின்றாயே மாய்கை
போக்கினையோ பேயே ஐயை(பாழ்)

2. வள்ளலுக்குநிக ரெனபொய்மொழி
வசனித் தாட்டுவாய் ஞான
வாக்கியந்தனை பலர்க்கும்ஊட்டியும்வீண்
வழியில் பூட்டுவாய் குணம்
மாற்றியெனை யோட்டுவாய் ஐயோ(பாழ்)

3. எண்ணித்தொலையா பாவஞ்செய்யினும்
ஏங்கிநினைந் திலையே தனத்தால்
இருமாப்பினைக் கொண்டலைந்தென்றும்
எங்கு மலைந்தாயே உனைப்போல்
எவருளர் சொல்வாயே ஐயா(பாழ்)

4. யாவுந்தந்தாள் பரனடித்தொழ
யாதும் கருதிலையே புல்லர்மேல்
பாவியசைத்துப்பாடி எக்களித்துக்கொண்ட
பாவமோ மலையே இதற்கு
பரிதாப மிலையே ஐயோ(பாழ்)

5. நீதிலாதசின் மயப்ரமானந்தம்
தேடிபணிந் திலையே ஞான
வேதநாயகன்மனங்கமழ்தேவை
வேண்டிநினைந் திலையே பவமற
விரும்பிகனிந் திலையே ஐயோ(பாழ்)

## மனமயக்கந் தவிர்த்தல்.

148-இராகம்-எதுகுலகாம்போதி-அடதாளசாப்பு.

பல்லவி.

நீமலைக்காதே நெஞ்சே-நீமலைக்காதே

அநுபல்லவி.

நேமத்துடன்ஐயன்-நாமத்தைப்போற்றிடில்
க்ஷேமத்தைக்கொள்ளுவோம்-காமத்திலேசிக்கி (நீமலை)

சரணங்கள்.

1. மோகத்தையும் அவி
போகத்தையும்உத்தி
வேகத்தையும்தரும்
யோகத்தையும்நம்பி (நீமலை)

2. ஆட்டையும்மங்கையின்
வீட்டையுமுன்கெட்ட
மாட்டையுங்கட்டிய
கேட்டையுமேஎண்ணி (மலைநீ)

3. இச்சுக்கிச்சென்றோடும் மூச்சுப்போனாலொரு
பேச்சுக்காகாமலப் பீச்சுகுழல்நம்பி (நீமலை)

4. நாட்டைக்கொள்ளையிடும் வேட்டைக்காரன்நமன்
சாட்டைக்கலைத்துயிர்க் கூட்டைக்கொள்வானையோ (நீமலை)

5. கேட்டைத்தருஞ்சோற்று மூட்டைதனையொன்ப
தோட்டைப்பாண்டத்தைக் கற்கோட்டையெனநம்பி (நீமலை)

6. கொண்டையிலேரத்நத் தண்டையிலேவிழிக்
கெண்டையிலேமதன் சண்டையிலேசிக்கி (நீமலை)

7. சேலையென்றும்முத்து மாலையென்றும்தினம்
வேலைகொள்ளும்பெண்கள் காலைத்தழுவியே (நீமலை)

8. சொத்துதமக்கென்று கத்துவதன்றி ஆ
பத்துக்குதவாத புத்திரரைநம்பி (நீமலை)

9. தாயகனைவேத நாயகனைவிட்டு
மாயவலைபட்டுத் தூயநெறிகெட்டு (நீமலை)



## நற்புத்திகூறல்.

141-இராகம்-சுருட்டி-திரிபுடை.

பல்லவி.

போனதுபோகட்டும் நீஇனியாகிலும்
புத்தியாய் வாழ்மனமே

அநுபல்லவி.

ஞானமில்லாத நடக்கையைத்தொட்டாயே
நம்பினஎன்னை நட்டாற்றிற்கைவிட்டாயே (போனது)

சரணங்கள்.

1. எத்தனைநாள் இருந்தாலும்-ஒருநாள்
இறப்பது சத்தியமே-அப்போ
தென்னவரும்புண்ணிய பாவம்அல்லாமல்மற்
றெல்லாம் அநித்தியமே
பித்தஉடம்பை வளர்த்திடச்செய்கிறாய்
பிரேதவயித்தியமே-என்றும்
பேதமில்லாப்பரன் பாதம்பணிந்தோர்க்குப்
பேரின்பம் சாநித்தியமே

பத்தர்சங்கத்தைநீ நித்தம்பிரிந்தாயே
பங்கம்புரிந்தாயே எங்குந்திரிந்தாயே (போனது)

2. தன்றாரம்அன்றிப் பரதாரந்தாய்க்குச்
சமானம்இதுதேரே-கெட்ட
தாசியைக்கண்டால் நமஸ்காரஞ்செய்துநீ
தப்பவழிபாரே
இன்றுநாளையென்று நாள்போக்காமல்வினை
இக்ஷணமேதீரே பின்னும்
எந்தஉயிரையும் சொந்தஉயிரென
எண்ணித்தயைகூரே
என்றும்பணப்பேய் தனைநீகும்பிட்டாயே
எச்சுக்குட்பட்டாயே சீச்சீநீகெட்டாயே (போனது)

3. நாத்தனைப்பேசிடும் நாவினால்அற்ப
நரஸ்துதிபாடாதே-நாளும்
நானெனதென்றபி மானம்பிடித்துநீ
நாடெங்கும்ஓடாதே
சாதகபாதகம் என்னவந்தாலும்
தவம்விடக்கூடாதே-கோடி
தர்மம்உனக்குண்டு கர்மம்வினைக்கும்
தனத்தினைத் தேடாதே
போதவேதநாயகன் தாள்விடுத்தாயே
பொன்னைஅடுத்தாயே என்னைக்கெடுத்தாயே (போனது)

---

## நித்தியானந்தந்தேடல்.

### 150-இராகம்-ஹிந்துஸ்தான்-காப்பி-ஆதிதாளம்.

பல்லவி.

நித்தியானந்தத்தைநாடு-பர
நின்மலசுகந்தேடு மனமே நித்தியா

அநுபல்லவி.

சத்தியமார்க்கந் தனிலேகூடு
சற்சனசங்கத் துடன்உறவாடு நித்தியா

சரணங்கள்.

1. இந்திரஜாலம் உலகவைபோகம்
இன்றைக்கிருப்பதுவோ சந்தேகம்
அந்தரமின்னல்போல் அழியும்தேகம்
ஐயோஅதனுடன் உனக்கென்னஸ்நேகம் (நித்தியா)

2. தனதானியமுத லானசம்பத்து
சாசுவதமோ அதற் காயிரந்தத்து
தினமுமங்கவலை விளைத்திடும்வித்து
சீச்சீ அதனை விரும்பல்விபத்து (நித்தியா)

3. மெய்யேஒன்றுக்கும் உதவாப்பண்டம்
மிருகாதிகள்சூழ் மாமிசகண்டம்
பொய்யோ இதற்கிங்கு நித்தியகண்டம்
புண்ணியஞ்செய்யுனக் காயிரந்தண்டம் (நித்தியா)

4. காண்பதெல்லாமிலை யல்லஅநித்தியம்
காயம்இறங்கிட வேண்டும்அகத்தியம்
வீண்பொருள்மீதுனக் கென்னவைத்தியம்
வேதநாயகன் சொல்லேசத்தியம் (நித்தியா)

---

151-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநான்-சொல்வதைக்கேள்-வீண்
மாயச்செருக்கினிலே-மலைந்துகுலைந்துகெட்ட
மனமேநான்-சொல்வதைக்கேள்

அநுபல்லவி.

கனகநிகராயுன்னை காட்டியேமறைகிறாய்
காலம்கழித்துப்பொய்கண் கட்டுவித்தைசெய்கிறாய்
சினமதுமிகுந்துவீண் செய்கையிலுழல்கிறாய்
தெய்வதாபக்தியை சிந்தியாதலைகிறாய்
சீச்சியுதவாது இதிலென்னசுகம்
மூச்சுப்போமுன்னேநூ தெய்வவிஸ்வாஸ

பேச்சைப்பயிலாதே துமுடிவிலொன்றும்
ஆச்சர்யமில்லாது இருதுணராமல்
அலைந்துமதிகுலைந்து-நிலைதவறியுழலும் (மனமே)

சரணங்கள்.

1. காரணங்கடந்துநின்றாயே கணக்
கடங்காதீமைசெய்தாயே கடையில்விழிப்பாய்நீயே
கருத்தறியாதேன்பேயே
தரணிமுழுதினும் ஆண்டிடவினைத்தாய்
தகைவிலாகுணத்தில் தழைத்துநீநனைந்தாய்
ஆரணநெறியெல்லாம் அறிந்தார்போல்குனிந்தாய்
அற்பமும்தெரியாமல் அறியாமல்பணிந்தாய்
ஐயோஇதென்னநன்மை இதையறிந்தால்
மெய்யாகவுதுஇன்மை வீணில்மயங்கி
செய்தாயேகோடிவன்மை ஆர்க்குதானேற்கும்
நெய்தாய்பவங்கள்பன்மை இனிதுணர்ந்து
நிமலனடிதுதிப்பாய்-விமலகுணங்கதிப்பாய் (மனமே)

செய்வதெல்லாம் பலதந்தரமே-உனது
சிந்தைகளியாவும்வீணே ஜெனித்தாய்பூவினில்தானே
தெரியாபடிப்பாய் மந்த்ரமே
ஐவர்நிறைந்தகாட்டை அருமலையெனவெண்ணி
ஆசைபூண்டலைந்தாயே யதினாலேதினங்குண்ணி
வையகத்தாசையில் மலைத்தனையேபண்ணி
மாசற்றவெளியினில் மகத்வனைநிதமெண்ணி
உய்யும்வகையைத்தேடு உன்னை
உணர்ந்தால்சுகமேநாடும் இது
மெய்யல்லபொய்க்கூடு நம்பும்
வீணர்க்குமுமலைடு இதை
விட்டுமதியைநாடு-விபூர்தவாழ்வினில்நீடு (மனமே)

3. எத்தனைஉனக்குபோதிப்பேன்-இருது
எவ்வினையினைகெடுக்கும் இன்பவழியில்விடுக்கும்
எத்தகைமையாக சாதிப்பேன்
பித்துபிடித்தலைந்தாய் பேதைகுரங்கே
பிரபஞ்சவாழ்க்கையிற் சுகமுண்டோதிரங்கே

அத்தனை பணிந்திட வாசைகொண்டிரங்கே
அற்பபாவங்களுனை யணுகுமுன்னாங்கே
சுத்தனடியோசீலம் மாய
சகத்திலேதனுகூலம் ஞான
பத்தரின்மறைமூலம் படித்தால்
பயனும்ஞானத்தின்பாலம் ஆதலால்
வித்தகன்கழலோசொர்தம் வேதநாயகன்சொல்லந்தம் (மன)

—[*]—

152-இராகம்யமுனகல்யாணி ஆதிதாளம்.

பல்லவி.

நித்தியானந்தமேசொந்தம் இதை
நினையார்க்குமுடிவில்-நிர்ப்பந்தம்

அநுபல்லவி.

நிகரிலாபரம்பொரு-ளிணையிணைதினந்தொழு
நிபுணர்ப்பராவும்ஞான-நிமலன்பாதத்திற்கழு (நித்தி)

சரணங்கள்.

பத்தர்மனம்பரவும் பகரொணுமயனே
பாலித்தருண்மலியும் பாக்கியநயனே
சத்தசாகரமியாவும் தந்தவிற்பயனே
சதானந்தபூர்ணன் தருகும்பொற்புயனே (நித்தி)
1. உலகந்தீதநோ மாயமென்றுரைப்பாய்
உத்தமர்மணியாதம் உசிதத்தால்நிறைப்பாய்
நலம்புகும்வகையினில் நாடியேகறைப்பாய்
நாடோறும்பகவானை நம்பிமயலைமறைப்பாய் (நித்தி)

2. காமக்குரோதமதத்தை காட்டாயலடிப்பாய்
கர்த்தவ்யன்கழலுக்கே காலத்தைமுடிப்பாய்
க்ஷேமந்தனைவேண்டிடா தீயர்முன்கொடிப்பாய்
திவ்யாசக்யமுதை தேடியேநடிப்பாய் (நித்தி)

3. பொல்லாமயலனைத்தும் புறம்பேநீதள்ளு
புனிதமெய்ஞ்ஞானநெறி போற்றியுட்கொள்ளு
நில்லாகடந்தனை நிசமலவென்றெள்ளு
நிபுணர்பணிந்தநிலை நீபெறதுள்ளு (நித்தி)

4. பாவவழியகன்று பக்தியில்தேரு
பரமானந்தசந்தோஷம் பார்க்கவேகோரு
ஆவல்நிறையுலக நித்யமதைப்பாரு
அல்லாமல்கதிவேறு யில்லையெனமீரு (நித்தி)

5. பாதகஞ்செய்யாத வகையதுநீதம்
பரவசங்கொண்டா லுண்டுசுகாதீதம்
வேதநாயகன் விளம்பினதுநற்போதம்
விதமறிந்தவர்க்கு ஏன்வேறொருவேதம் (நித்தி)



## கள்ள ஞானம்.

153-இராகம்-இந்துஸ்தான்-காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

புண்ணியம்போல்-பாபம்-மனமே
புரிந்தோம்நாம்-தினமே (புண்ணியம்)

அநுபல்லவி.

திண்ணமாகக்குளிக்கப் போயுந்தன்மேலே
சேற்றைப்பூசிக்கொண்டு திரும்புதல்போலே

சரணங்கள்.

1. கையிலேநாம்பிடிப்பது ஜெபமாலை
கஷ்கத்தில்வைப்பதுவோ கன்னக்கோலை
மெய்யாகத்தினம் படிப்பதுதர்மநூலை
மேலுமேலும்நமக்கு துன்மார்க்கவேலை (புண்ணி)

2. ஒருபெண்வேண்டாமென்றுகொள்வோம் சந்நியாசம்
ஊரில்உள்ளபெண்கள் மீதெல்லாம்நேசம்
பருகப்பசியில்லாத போதுபவாசம்
பசித்தால்ஒருபானைப் பருக்கையும்நாசம் (புண்ணி)

3. கடவுளைத்துதிப்பது போல்வாய்பாடும்
கண்ணுங்கருத்துங்கண்ட இடமெங்கும்ஓடும்
திடமாகக்கோயிற்குள்ளே தேகம்போய்க்கூடும்
சிந்தனைவெளியிலே திரிந்துதிண்டாடும் (புண்ணி)

4. ஆனைத்தலையில்வளர்ப்பது ஜடைமுடியே
அனுதினமும் கடுப்ப ல்லாயிரங்குடியே
தானம்பிரர் அறியக் கொடுப்பதோர்நொடியே
தனியேயவர்தவனுக்குத் தான்தடி அடியே புண்ணி

5. அடித்திடும்கொடுமையிற் புலிக்குநாமேலே
ஆனையினால் ஆசனம் புலித்தோலே
நடித்திடும்குரங்கு நாம்சேஷ்டையினுலே
நமக்குள்ளகுறைவு பின்புறத்தொருவாலே புண்ணி

6. அங்கமெல்லாங்கரு மேகவியாதி
அதனைமறைக்கமெய்யில்லை அணிவோம்விபூதி
கங்கையில்இல்லாப்பொருள் மனையாதி
நாம்துறந்தோம்நல்ல துறவறநீதி புண்ணி

7. ஏகஅன்னம்தள்ளிப் பிடிப்போம்ஒருசந்தி
இதரபக்ஷணங்களால் நிறைப்போம்தொந்தி
தேகபலம்ஒடுங்கில் விரக்தியாய் பிந்தித்
திடமானல்நம்செய்கை சிறிக்குமேசந்தி புண்ணி

8 உள்ளத்தின் அழுக்கை எந்நாளுமேகழுவோம்
உடலைக்கழுவநீரில் அடிக்கடிவிழுவோம்
கள்ளத்தனமாகச்சந் நிதிமுன்னே அழுவோம்
காசுக்குநாயையும் கைகட்டித்தொழுவோம் புண்ணி

9. பசியில்லாதவர்க்குச் செய்வோம்அன்னதானம்
வசித்துவந்தோரைச் செய்வோம்அவமானம்
சுசியாகப்பிறர்க்குப தேசிப்போம் ஞானம்
துர்க்குணக்கடலிலே தினஞ்செய்வோம்ஸ்நானம் புண்ணி

10. பெருமையாயணிவது காவிவஸ்திரமே
பிரதிஷ்டைசெய்வது தர்மசத்திரமே
பரவியநமது துர்க்குணம்சமுத்திரமே
பாடோம்வேதநாயகன் சரித்திரமே புண்ணி

---

154 இராகம் கேதாரகௌளம் ஆதிதாளம்.

பல்லவி.

புண்ணியம்போல்பாபம்மனமே புரிந்தனையேதினமே
புகழிதிலுண்டோ கனமே
புகழ்ச்சியும் இகழ்ச்சியும் பேதமறியாமலே
அகந்தையிலிறுமாப்புற் றலைந்தாய்தெரியாமலே புண்

அநுபல்லவி.

கன்மவசத்தினாலே காலந்தனையறிந்து
கருதறியாதலைந்து கரணம்புண்ணுப்பறிந்து புண்

சரணங்கள்.

1. ஒன்பதுவாசலும்ஊத்தை இதைமறுத்திடவாசனை
ஊட்டிவைப்பாயேசோத்தை
ஒளியிருந்துமந்தகன் போலலைவாயேசேட்டை
ஒன்றுக்குதவாத உசிதமில்மண்கோட்டை என்
எண்ணிக்கையில்லாமல் நல்லோர்க்கிடரென்றுமேபுரிவாய்
ஏதுமில்லார்க்கு துரோகம் எந்நாளுஞ்செய்துதிரிவாய் புண்

2. வையகத்தோர்காணநீர்பூசுவாய்வாயிதோ ஹீனசொற்களை
வழுத்திமலைத்துபேசுவாய்
கையில்செபமாலைகொண்டகம்வேறெசொல்லுவாய்
கழுத்தில்ஆரங்கள்பூண்டேகட்டுகதைபுல்லுவாய் வைய
துய்யஞானங்குழகுமென்று சொல்கட்டியேயுகட்டி
தூயநெறிபோல்கொடுப்பாய் தொகையாயிரம்புகட்டி புண்

3. பசியில்லாதோரை அழைப்போம் பசித்தவரைவெறுட்டிமிகப்
பாதகஞ்செய்தே பிழைப்போம்
பரணின்நாள்ஒருபோது என்றுசொல்லியேபசித்தால்
பானைசோற்றையுமுண்டு பந்தடிப்போம்பசித்தால் பசி
விசணித்தோர்கள்தன்னை வேசாறிபல்கடிப்போம்
வேதநாயகன்சொல்லைவேண்டாதுயிர்மடிப்போம் புண்

## பொருளாசை யொழித்தல்.

---

155 இராகம் கனகவசந்தம் ஆதிதாளம்.

பல்லவி.

பொருளைவிரும்பவேண்டாம் மனமே
பொருளைவிரும்பவேண்டாம்

அநுபல்லவி.

ஒருவரிடமும்மில்லா தூரெங்கும்பறக்கும்
திருவேதநாயகன் சேவடிதூரக்கும் பொருளை

சரணங்கள்.

1. பணமுள்ளவர்க்கு நமன்பயப்படுவானோ
குணமுடன் அவர்களைக் கும்பிடுவானோ
2. தனவான்களைத்துயர் சாரஅஞ்சிடுமோ
கனசுகம்அவருடன் கலந்துகொஞ்சிடுமோ பொருளை
3 பார்க்கவொட்டாமலே பார்வையைக்கெடுக்கும்
வார்த்தைசொல்லாமலே வாயையுந்தடுக்கும் பொருளை
4. மண்டலத்தில்நமக்கு வயிறொருகுதிரா
கண்டபடிஉண்ண நாம்கபந்தனுக்கெதிரா பொருளை
5. ஊரில்நம்மிருப்பிடம் ஒருமுழமட்டே
பாரிலேநமக்கேன் பலமனைக்கட்டே பொருளை
6. உலகில்வயிறுநமக் குள்ளதுசாணே
மலைமலையாக்குவித்து வைக்குதல்வீணே பொருளை
7. சங்கையில்லாமற் பணந்தலைவெட்டும்ஒருவாள்
தங்கைவருவாள்பின்பு தமக்கையும்வருவாள் பொருளை
8. வித்தாரமாகப்பொருள் வேண்டுதல்தாழ்வு
செத்தால்தெரியுமே செட்டியார்வாழ்வு பொருளை
9. அருளுடன்ஏழைக் குதவாப்பணம்பிணமே
பொருள்அதைக் குழிவெட்டிப் புதைக்குதல்குணமே பொரு.
10. பூதமானாலும் உண்ணப்போதுமாகாணி
ஆதலால்நமக்கேன் ஆயிரங்காணி பொருளை

11. கெண்டைச்சேலைக்காரிதான் கிழவியாகாளோ
கொண்டைப்பூமுடித்திடும் குமரிசாகாளோ பொருளை

12. வெறுங்கழுத்தாயிருந்தால் விக்குமோதொண்டை
உருந்தலை அணிபோனால் உடையுமோமண்டை பொருளை

13. கடுக்கன் இல்லாவிட்டாற் காதுகேளாதோ
உடுப்புகள் இல்லாவிட்டால் உடம்புநீளாதோ பொருளை

14. கந்தலை அணிந்தவள் கர்ப்பம்ஆகாளோ
விந்தைநகைஉள்ளவள் மெலிந்துபோகாளோ பொருளை

15. பொருந்தச்செலவிடாமல் புதைத்திடும்பணமே
இருந்தென்னபோயென்ன இதில்என்னமணமே பொருளை

16. நிதிவெள்ளியாதிகள் நிச்சயம் மண்ணே
புதையல்தன்னிணமென்று புசிப்பள்மண்பெண்ணே பொருளை

---

## செல்வச் செருக்கு.

159 இராகம் தேவமநோஹரி ஏகதாளம்.

பல்லவி.

வீண்கர்வம் ஏன்மனமே உனக்கு
வீண்கர்வம் ஏன்மனமே

அநுபல்லவி.

காண்பொருள்சகலமுங் கடவுள் ஆதீனம்
கனதொண்டமானுந் தோட்டியுமேசமானம் வீண்

சரணங்கள்.

1. நம்முடன்பிறந்ததுண்டோ உத்தியோகம் வீண்
நமக்குமுன்னே அதுமலர் அநுபோகம்
அம்மஅதற்குக் காத்திருப்பர் அநேகம்
அனைவர்க்கும்உண்டு ராஜீகதெய்வீகம் வீண்

2. தாசிகள்போல்செல்வம் பலருடன்கூடும்
தனமிருந்தஇடத்தில் தரித்திரம்நாடும்
கூசாமல்யானையைக் கொசுகுமேசாடும்
குப்பைஉயர்ந்து கோபுரத்தையுமூடு வீண்

3. கனவில்கண்டகத்திரிக்காய் கறிக்காமோ
கல்லால் இரும்பால்காயங் கொண்டோமோ
தினம் அசையாமல்மண்ணில்வேர்கொண்டநாமோ
சினந்துநாம்சபித்திடில் திசையெல்லாம்வேமோ (வீண்)

4. தம்பொருளென்பர் மனைவியர்மைந்தர்பேரர்
தப்பினால் விடுவரோ தாயாதிக்காரர்
வெம்பிச்சமயம் பார்த்திருப்பார்சோரர்
மிச்சத்தைச்சுருட்டுவார் மேல்அதிகாரர் (வீண்)

5. இடையிற்கோவணமின் றிப்பிறந்தோமெய்யே
இறந்திடுங்காலத்தும் நாம்வெறுங்கையே
உடைமைநமதுசொந்தம் என்பதுபொய்யோ
ஊரார்பொருளைநாம் சுமந்தோம் ஐய்யே (வீண்)

6. ஜெகமுழுதும்நமக்குச் சர்வமானியமா
சிந்தித்தகாரியம் எல்லாம் ஜயமா
சுகதுக்கபேதம் எல்லாதிவ்யமயமா
துஷ்டன் இமயனுக்கு நம்மைக்கண்டால்பயமா (வீண்)

7. நீடுந்தங்கையுந் தமக்கையும் அதிநேசம்
நிதமுங்கைம்மாறிக் கொள்வார் அவர்வாசம்
சூடுமண்டமாடுபோல் துள்ளல் ஆபாசம்
துள்ளினமாடுபொதி சுமக்கும்பிரகாசம் (வீண்)

8. தாய்வயிற்றில் இருந்து ஜனித்திட்டபோது
சட்டைதலைப்பாகுடன் நாம்வந்தகேது
மாயப்பிரபஞ்சத்தின் வாழ்வெல்லாஞ்சூது
மாவேதநாயகனை மறக்கவொண்ணாது (வீண்)

---

## 157-இராகம்-தன்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

மனமே உனக்கு-ஏன்கர்வம்-முடிவில்
வாய்த்திடுமோசொல்-தர்மம்-பாழ் (மனமே)

அநுபல்லவி.

கனவிற்கண்டஊமையின் கதைபோல்முடியும்வாழ்வு
கனமலையெனநம்பி காலங்கழித்திடில்தாழ்வு

சரணங்கள்.

1. பொருளதுவும் மலையாமோ-நம்பிடில்
புறைதவிர்த்திடும் நிலையாமோ

கருணும்பரசுகுண கர்த்தவ்யனடிதினம்
கவனியாதலைந்தாயே காதகமுப்பகைமுனம்
தருணமறிந்துவரும் தகைவிலாஏமனின்சினம்
தணித்திடலாகுமோ சஞ்சலநிறைகன (மனமே)

2. அத்தியைகொசுகுசாடுமே-உனது
அவபக்தியாவும் பொய்யாய்விடுமே

சத்தசாகரம்யாவும் தந்தருள்செய்காரண
சருவாநுக்ரஹகுண சாஸ்விதனும்பூரண
அத்தனடிநினையா தகந்தைபூண்டாய் ஆரண
அந்தரங்கமறந்து அலைந்தனையேஹீன (மனமே)

3. மோகம்பிணியதிலே நிலைத்தாய்-உன்னை
முழுதுணராமல் காலங்கழித்தாய்

யோகஉத்தியோகமென முற்றினும்வாடி
போகவத்தியாயத்தில் மலைத்தெனை நாடி
தேகம் நிலையென்றெண்ணி தீங்கினால்கோடி
செருக்கினிலுழன்றாயே திறமென்னநீடி (மனமே)

4. உண்டாகில்வருவார் பலசுற்றம்-அதனை
உரைப்பதற்கியல் புண்டோசிற்றம்

கண்டவுடன்பணிந்து காலைக்கும்பிடுவார்
காசிலாவிடிலோவீண் கதைபுகன்றிடுவார்
அண்டர்க்கும்விசிதமாய் ஆசிர்கூறிடுவார்
அனியாயமிதைக்கண்டு அகந்தைகொண்டிடுவார் (மனமே)

5. தீதறநிறைந்தலைந்தாயே-உனது
செய்கையனைத்துணரில் வாயே

போதனுசக்தியை போக்கடித்திடுவாய்
பொல்லாபஞ்சவேடரால் பொழுதைநோக்கிடுவாய்
வேதநாயகன்சொல்லை விடிலோநீகெடுவாய்
விமலனடிமறந்தால் வேதையுட்படுவாய் (மனமே)

## உலகவாழ்வை வெறுத்தல்.

158-இராகம்-ஹிந்துஸ்தான்காபி-ரூபகதாளம்.

பல்லவி.

வாழ்வைநம்பாதே-மனமே-வாழ்வைநம்பாதே.

அநுபல்லவி.

தாழ்வில்லாத நமதுஸ்வாமி
தாளைத்தேடுபாடு பூமி

சரணங்கள்.

1. தேகமாம்ஸ மூட்டை பல
ஜெந்துவுக்கும்நல்ல வேட்டை அதில்
ஓமோ அனந்தம் ஓட்டை உயிர்
ஓடிட எத்தனை பாட்டை இந்த(வாழ்வை)

2. இன்றைக்காளுவார் நாடு நாளை
எடுப்பார்கையிலே ஓடு உடல்
ஒன்றுக்குதவாத கூடு இதை
உற்றுப்பார்த்தால் வெட்கக்கேடு புவி (வாழ்வை)

3. பெண்டுபிள்ளைக் கென்னவாட்டம் நம்மைப்
பிடுங்கித்தின்பதில் நாட்டம் கையில்
உண்டாகும்போது கொண்டாட்டம் செல்வம்
ஓய்ந்தால்சுகலரும் ஓட்டம் புவி (வாழ்வை)

4. இந்தஉலகத்திற் பிறந்தார் முன்னம்
எத்தனையோபேர்கள் இறந்தார் பெற்ற
தந்தைதாய்பாட்டரும் பறந்தார் நாலு
தாரங்கள்போய்நம்மை மறந்தார் புவி(வாழ்வை)

5. இன்றுபல்லக்கினிற் போவார் நாளை
எடுக்கும்ஆள்களும் ஆவார் நரர்
என்றவர்யாவருஞ் சாவார் மதி
ஈனர்நரகத்தில் வேவார் புவி (வாழ்வை)

6. கூத்தில்அரசனைப் போலே வேஷம்
கொண்டவர்க்குண்டோ செங்கோலே புவி
சாத்தியநாடக சாலை அந்தச்
சாலையில்நாம் எந்தமூலை இந்த (வாழ்வை)

7. வண்டியும்ஓடத்தில் ஏறும் ஓடம்
வண்டியில்ஏறும் நாள்தோறும் நாம்
கொண்டபொருள் கைம்மாறு வேதம்
கூறுஞ்சொல்லே நீறைவேறும் புவி (வாழ்வை)

8. எண்ணிக்கையில்லாமல் இங்கே முன்னம்
இருந்தவரெல்லாம் எங்கே நாமும்
நண்ணிப்போகவேண்டும் அங்கே வேத
நாயகன்பாதம் நம்பங்கே புவி(வாழ்வை)

---

159-இராகம்-கனகவசந்தம்-ஆதிதாளம்.

பல்லவி.

நம்பாதே-வாழ்வை-நம்பாதே-நெஞ்சே
நம்பனடிபோற்று - வேத
நாயகன் துதியை சாற்று
நாளும்கொண்டேற்று (நம்பாதே)

அநுபல்லவி.

வெம்பிதின்மும்வாடும் வேதைமலிந்துகூடும்
வம்புநிறைந்துநாடும் மயங்கிமுடிவில்நாடும்
வாதுமுழுதும்-சூது-இது
தகாதுவீண்மயலிது
சுகம்பெறவே ஓது (நம்பாதே)

சரணங்கள்.

1. ஐம்புலர்கூடியவீடு அநித்தியஆத்தைக்காடு
ஐயோயிதின்பற்பாடு அழிந்திடும்ஒட்டை ஓடு
பொய்யாய்வந்ததிது வீண்
புரணிபூண்டதிது
போகுங்கால் சொல்லாதிட (நம்மாதே)

2. எத்தனைபேர்களேஜனித்தார் எல்லாருமெங்கேயொளித்தார்
சித்தமொடுங்கிகளைத்தார் சீரிலாதென்றேதொலைத்தார்

சித்துநிறைந்ததிது-மாய
பித்துபிடித்ததிது
சத்திபோனால் தெரியுமிது (நம்பாதே)

3. மண்டலீகர் இருந்தாரே மாய்ந்துமாய்ந்து ஒடுங்கினாரே
கண்டபடி திரிந்தாரே காலங்கழித்துமுடங்கினாரே
கண்கட்டுவித்தையிது-ஹீன
புண்பட்டுவந்ததிது
துண்புற்றுழல்வதிது (நம்பாதே)

4. எண்சாணிதுகோட்டை எக்காலத்தும்மிருகவேட்டை
நண்பிலாதவீட்டை நம்பிடில்வருங்கேட்டை
நாயகனடிசொந்தம்-வேத
நாயகன்பிரபந்தம்
நாளுந்துதி அந்தம் (நம்பாதே)

---

## உடலை வெறுத்தல்.

---

### 160-இராகம்-இந்துஸ்தான்காபி-ரூபகதாளம்.

பல்லவி.

உடலைநம்பாதே- மனமே (உடலை)

அநுபல்லவி.

குடலுந்தசையும் எலும்பும்நரம்பும்
கொழுத்துப்பழுத்தும் புழுத்துநிரம்பும் (உடலை)

சரணங்கள்.

1. இந்திரியம்மலமூத்திரம்-தசை
இரத்தம்நிறைந்தபாத்திரம்-பாச
பந்தப்பேய்வளர்க்ஷேத்திரம்-வெறும்
பவந்தநாடக சூத்திரம்-இந்த (உடலை)

2. ஆசைப்பட்சியின்கூடு-பல
அசுத்தஞ்சேர்குப்பைமேடு-இதை
ஏசிப்போவென்னும்வீடு-கிட்ட
எட்டிவாவாவென்னுங்காடு-இந்த (உடலை)

3. கண்ணிற்பீளைகள்வடியும்—இரு
காதிற்குறும்புபடியும்—சளி
வண்ணமூக்கில்வந்திடியும்—நல்ல
வாயில் எச்சிலாய்முடியும்—இந்த (உடலை

4. பயனின்றிவிழுமட்டை—கொடும்
பாம்புகழற்றுஞ்சட்டை-போலே
உயிர்போனால்வெறுங்கட்டை—இதை
உற்றுப்பார்த்தால்லொடலொட்டை—இந்த (உடலை)

5. காகம்நாய்நரிக்கூட்டம்—பல
கழுகுக்கும்நல்லஊட்டம்—கரு
மேகநிழல்போல் ஓட்டம்—இது
மெய்யல்லப்பொம்மலாட்டம்—இந்த (உடலை)

6. எத்தனைபேர்புவியாண்டார்—அவர்
எல்லவருமுன்னே மாண்டார்—இங்கே
செத்தவரில் எவர்மீண்டார்—தெய்வ
சித்தம்ஒருவருந் தாண்டார்—இந்த (உடலை)

7. மோடியேன் ஒருக்காலே—உடல்
முழுதும் எலும்புந்தோலே—அதில்
நாடிஒடுங்கினலே—பின்பு
நமக்கிங்கே என்னவேலை—இந்த (உடலை)

8. கணவன்தெய்வ மென்பாள்பாரி—அவள்
காரியத்திற்கெட்டிக்காரி—செத்த
பின்முன்வருவாளோநேரில்—சுகம்
பிரிந்ததற்கல்லோ ஒப்பாரி—இந்த (உடலை)

9. கிருமிகட்குபகரணம்—தசை
கிழிந்துவடியும் இரணம்—சிறு
கருமமேற்கொள்ளுந்திரணம்—இது
கரணந்தப்பினல்மரணம்—இந்த (உடலை)

10. வேதநாயகன்கூறும்—சொல்லை
மீறினல்நலமாறும்—பல
காதநதுர்க்கந்தம்நாறும்-பித்தம்
கபமலஞ்சலம் ஊறும்—இந்த (உடலை)



161-இராகம்-கமாசு-ரூபகதாளம்.

பல்லவி.

உடலைநம்பாதே-என்மனமே
உடலைநம்பாதே (உடலை)

அநுபல்லவி.

புடவியோர்புகழ்ந் தேற்றுங்கனத்தால்
மடமையாய்நம்பி வாழும்சினத்தால் (உடலை

சரணங்கள்.

1. சீழும்பிணந்தானே-இதில்
சேர்ந்ததெல்லாம்வீணே
பாழாம்கடமதைப் பற்றிச்சுகமுண்டோ
வீழ்ந்தவுடன்நரியாய் விழுங்கதடையுண்டோ (உடலை)

2. மூத்திரமிந்த்ரியமே-இதினல்
முற்றுமாதந்த்ரமே
காற்றும்பஞ்சகருவி சரிந்திடும்நாற்றமே
சாஸ்விதமாய்நினைந்து சாவதுபாத்ரமே (உடலை)

3. பறவைக்கேவேட்டை-உற்றுப்
பார்க்கினில்மண்கோட்டை
பிறந்துமிறந்தும் பிணியதேசேட்டை
பிரபஞ்சவாழ்க்கையில் பேசில்நவஓட்டை (உடலை)

4. நாறும்சமுத்திரமே-இதை
நம்பிலனித்தியமே
சீறுமலசலம் சீற்றற்றுறுத்தியே
பேசாமலோடுங்கால் பின்னென்னசித்தியே (உடலை)

5. தீதுநீறைக்குணமே-காற்று
செயல்முடிந்தால்பிணமே
வேதநாயகன் விளம்புதலுண்மையே
விற்பன்னவாக்கினை யுணர்ந்திடினன்மையே (உடலை)

# பண தூஷணை.

---

## 162-இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

பணமேஉன்னால் என்ன குணமே-தண்டம்
பண்ணினேன்சற்றும்-என்கண்ணின்முன்னில்லாதே (பண)

அநுபல்லவி.

மணமில்லாதமத மோகங்குரோதந்தன்
மார்க்கமுமூர்க்கமும்யார்க்குமேபோதிக்கும் (பண)

சரணங்கள்.

1. தேடிஉனைவைத்து மூடியவர்க்குநீ
தீர்க்காயுசுதருவாயோ-இனி
நாடியமன்வந்து சாடிடும்போதுநீ
நானென்று முன்வருவாயோ
கூடியபேர்கள் குடியைக்கெடுப்பானே
கொல்லச்சொல்லிப்பின்னுங் காட்டிக்கொடுப்பாயே
ஓடி ஓடி அற்பரைப் போயடுப்பாயே
உத்தமரைக்கண்டால் ஓட்டமெடுப்பாயே (பணமே)

2. மத்தியில்உன்னைப் படைத்ததல்லால்முன்
வரும்போதுகூடவந்தாயோ-இஷ்ட
சித்தியும்சத்தியும் நித்தியங்கைகூடச்
சிலாசாசம்நம் நீதந்தாயோ
புத்தியிருக்கும் இடம்விட்டுநீங்குவாய்
பொய்யுபுரட்டும் உள்ள இடத்தோங்குவாய்
எத்திசையுங்கெடுத்துப் பழிதாங்குவாய்
ஈயாதவர்கையகப் பட்டுத்தூங்குவாய் (பணமே)

3. மண்ணில் உனைநரர் பண்ணினதன்றி
மனிதரைநீபண்ணினையோ-உயர்
விண்ணினை மண்ணினைப் பண்ணினோன்நேசம்
விலகச்செய்சத்துரு நீயே
எண்ணிறிதான இடமெங்கும் ஓடுவாய்
இந்திரஜாலஞ்செய்து விளையாடுவாய்

வண்ணரர்கள் மனக்கண்ணைமூடுவாய்
வைத்துப்புதைப்பவர் வாயில்மண்போடுவாய் (பணமே)

4. வஞ்சகமாயப் பிரபஞ்சமெல்லாம்நீ
விளைத்தச்செய்வாய்கொடுங்கோண்மை-கெட்ட
நஞ்சம்நிகரனை நெஞ்சம்எண்ணாதமெய்ஞ்
ஞானிகட்கல்லவோ மேன்மை

பஞ்சமாபாதகங் கட்குநீ ஆலயம்
பாரில்துன்பமென்பதெல்லாம் உன்தன்மயம்
இஞ்சனையுடையோர்க் கொழியாப்பயம்
வேதநாயகன்மே லுனக்குண்டோஜயம் (பணமே)

---

## 163-இராகம்-தோடி-ரூபகதாளம்.

### பல்லவி.

பணமேஉன்னால்என்னநற்குணமே-பாழுமயலைத்தரும்
பணமேவந்து-பெறுதல்பற்சினமே

### அநுபல்லவி.

கணநேரமும்கருத்திலையா காலங்கழித்துயினரைப்புகழும்
கவனங்கொண்டவாபாதத் தொண்டுசெய்து
காட்டுகிறாய்-என்னை-மூட்டுகிறாய்-ஐயோ (பணமே)

### சரணங்கள்.

1. அலக்கழித்து யாவரையும்சேர்ந்து
அற்பரிடத்தெலாம் அன்பதிகூர்ந்து
கலக்கமுறவேசெய்கிறாய் தேர்ந்து
கண்ணின்முன்னில்லாதே காட்டுமயல்தீதே (பணமே)

2. புத்தியற்றோரிடம் புதையலானாய்
பூர்த்திசிந்தையில் லார்மேல்தயவானாய்
சத்தியம்நீங்கி அசத்தியமானாய்
சார்ந்தோர்க்கெல்லாம் பொல்லாசற்பனையானாய் (பணமே)

3. உன்னால்விளைவதற் குண்டோமோகனைக்கு
ஊனரையெல்லாம்வாயில் போடுவாய்பிதுக்கு
நன்றியில்லாரிடம் நடஞ்செய்யுனக்கு
நாட்டமுடனேதிண் டாட்டம்வீண்மணக்கு (பணமே)

4. வாதுடன் தீதுபலவும் வாய்த்தாயே
வஞ்சகவாழ்விற்கே துணையானாயே
வேதநாயகன் வெறுத்துதமுனையே
வேண்டனுனைக்கையால் தீண்டேன்இனியே (பணமே)

---

## பரஸ்திரீகமனம் விலக்கல்.

### 164-இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

மாதரைநினையாதே-நெஞ்சே (மாதரை)

அநுபல்லவி.

பூதமேல்பெரும் பாதகமும்விப
ரீதமுமேவரும் ஆதலினால்மறு (மாதரை)

சரணங்கள்.

1. அருமஞ்சட்பூச் சல்லவோமுகக்காந்தி
அடிக்கடிபெண்கள் திறமாறும்பச்சோந்தி
ஒருமையாஅவர்களை விரும்புதல்பிராந்தி
உடற்குட்புகுந்துபார்த்தால் வரும்வாந்தி (மாதரை)

2. முன்னழகும் பின்னழகுமேபட்டு
முகஅழகானது நெற்றியிற்பொட்டு
அன்னநடையென்பது கவிஞர்கள்கட்டு
அழகுநில்லாமற் பறந்திடுஞ்சிட்டு (மாதரை)

3. மரித்திடுமாதர்கள்சுகம் அரைக்ஷணமே
மறுநிமிஷத்தில் உண்டாந்துன்பரணமே
பிரிந்திடில்மலஜலம் எலும்புதோல்பிணமே
பிராணன்போனால்நரி நாய்பிடுங்கிடும்பிணமே (மாதரை)

4. மேனிமுழுதும் வெளிவேஷத்தின்தனுக்கு
மினுக்கெண்ணெய்பூசியே காட்டுவார்தளுக்கு
ஈனம்அறவேதினந்தினந் தண்ணீர்முழுக்கு
இல்லாவிடில்கப்பல் ஏற்றலாம்அழுக்கு (மாதரை)

5. இடையில்மயக்குவது சாலியன்சேலை
இருகாதில்ஜொலிப்பது தட்டான்கைவேலை
கடையிலேவிற்பது கொண்டைப்பூமாலை
கன்னிக்குச்சொந்தமெல்லாம் வெறுந்தோலே (மாதரை)

6. கன்னியர்விழிஉயிர் பிளந்திடும்அம்பு
கனதனம்நமன்குழல் உனைக்கட்டுந்தாம்பு
அன்னியமாதர்கள் விஷமெனநம்பு
அவருடன்பேசுவதே பெரும்வம்பு (மாதரை)

7. இதமாகவேமனந் செய்தசீமாட்டி
இகபரம்இரண்டுக்கு மேல்வழிகாட்டி
இதர்மின்னார்களைச் சேர்வேன்கரமாட்டி
எண்ணைறக்கும்அவளுக்கு மூத்தவள்பேட்டி (மாதரை)

8. ஊன்றுங்காமாதுரர்க்கு ரோகங்கள்நிலையே
ஈளறும்போட்டகையில் வேண்டும்வேப்பிலையே
அன்றுகொண்டவன் அறிந்தால்வருங்கொலையே
அற்பசுகத்தில்வரும் ஆபத்துமலையே (மாதரை)

9. கழுவிவாசனைஊட்டாவிடில் கெட்டவீச்சு
காதவழிஅடிக்கும் அதிசயப்பேச்சு
தொழும்அழகென்பதெல்லாம் மேற்பூச்சு
தோகையர்கிழமானால் கனஏச்சு (மாதரை)

10. அழகழகென்பதெல்லாம் வெறும்ஜாலம்
அணியும்துணியும்போனால் அலங்கோலம்
விழல்நிகர்சுகத்தினை வெறுப்பதுசீலம்
வேதநாயகன்சொல் அநுகூலம் (மாதரை)

165-இராகம்-இந்துஸ்தான்காபி-ஆதிதாளம்.

பல்லவி.

கேள்மனமே நான்சொல்வதைஅநுதினம்-பல

அநுபல்லவி.

சூழ்புவிவாழ்வை சுகமெனநம்பாதே
தாழ்வினைகொடுத்திடும் தாசிகளால்வெம்பாதே (கேள்)

சரணங்கள்.

1. திரேகமென்பதுகண்ணில் கண்டதுதசையே
நிரோகமவரால்வந்து நோயுறுபசையே (கேள்)

2. நாளும்உடலில்வாசம் நாடோறும்பூசுவார்
சீறும்தனத்தைக்காட்டி செய்கைகண்ணைவீசுவார் (கேள்)

3. சிக்கடித்திடுங்கூந்தல் தினமும்வாரிடுவார்
புக்கும்கடிதடத்தில் புகவேசெய்திடுவார் (கேள்)

4. ஒய்யாரகதைபடித் துலகைவசமாக்குவார்
கையும்படிசெய்துன்னை நமக்கிரையாக்குவார் (கேள்)

5. தட்டான்செய்தநகையால் சாடைகாட்டிடுவார்
ஒட்டாமரமாகஉன்னை உருக்கியோட்டிடுவார் (கேள்)

6. கலமிலாநாயைப்போல் நாளுமேதிரிவாள்
குலமொன்றிலாமலே கூசைபோல்சரிவாள் (கேள்)

7. பரஸ்திரீகளைகண்ணினால் பார்ப்பதுதோஷம்
நிரமாறியாடைபூண்டு காட்டுவார்வேஷம் (கேள்)

8. பூதஉடல்வளர்க்க புத்திமயக்கிடுவார்
வேதநாயகன்சொல்லை விரும்பாமல்தியங்கிடுவார் (கேள்)

---

## இதுவும் அது.

166-இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேஉனக்குமகாசுகிர்தம்-மறு
மாதரைநினையாதே (மனமே)

அநுபல்லவி.

தினமென்சொற்படி கேட்டால்உனைத்துதி
செய்வேன்மறுத்திடில் வைவேவைவேன் (மனமே)

சரணங்கள்.

1. சட்டிமுகத்தைச் சந்திரபிம்பமென்று-வெறும்
சதைக்கட்டிகளைத்தங்கக்கும்பமென்றும்
முட்டிக்கால்களைச்சொர்ணஸ்தம்பமென்றும்-மாதர்
முன்கமலைக்குஞ்சபாக்கம்பமென்றும்
மொட்டைத்தலைக்குமுழங்காலுக்கும்பிணைத்தே
முடிந்தாயே-வினை-படிந்தாயே-கெட்ட (மனமே)

2. உச்சிட்டமதை அமிர்தக்கட்டியென்றும்-நாறும்
ஊத்தைவாயைப்பவளப்பெட்டியென்றும்
மச்சம்பீளைவடியுந்திட்டியென்றும்-தே
வாங்குருவை ஆபூர்சிட்டியென்றும்
பிச்சைக்காரன்கந்தையைமெச்சிக்கொள்வதுபோல்
பிடித்தாயே-பொய்யைப்-படித்தாயே-கெட்ட (மனமே)

3. செட்டிகளால் அல்லவோ இடையழகு-எண்ணெய்ச்
செக்கார்களால்அல்லவோ-சடையழகு.
தட்டார்களல்லவோ நடையழகு-மாதர்
தம்மழகெல்லாம்பலகடையழகு
குட்டிச்சுவரில்முள்ளவெள்ளெழுத்தோ நீ
குறித்தாயே-பெண்ணைத்-தறித்தாயே-கெட்ட (மனமே)

4. சொத்தைப்பற்களை முத்துச்சரங்களென்றும்-பிகச்
சும்பியதோளை மூங்கில்மரங்களென்றும்
சித்தமாகக்கமலக்கரங்களென்றும்-நாறும்
சிக்குமயிரைச்சலதரங்களென்றும்
பித்தன்போல்வர்ணித்துவேதநாயகன் அடி
பிரிந்தாயே-துன்பம்-புரிந்தாயே-கெட்ட (மனமே)

---

## இதுவும் அது.

167-இராகம்-சௌராஷ்டிரம்—ஆதிதாளம்.

பல்லவி.

பெண்ணாசையேபெரும்பித்து-அதில்
பிரமிப்பதெல்லாம்விபத்து (பெண்)

அநுபல்லவி.

கண்ணாலேவலைபூட்டி அற்பசுகம்
காட்டிப்புருஷரை வாட்டிவதைக்கும் (பெண்)

சரணங்கள்.

1. கலகலென அசைப்பார் அவர் தண்டை
காட்டுமிருகமயிரே கொண்டை
உலகைமயக்கும் அவர் சேலைக்கண்டை
உற்றுப்பார்த்தால் நன்மைஏதவர் அண்டை (பெண்)

2. கேவலம் அங்கமெல்லாம் — பிணநாற்றம்
கிறுகிறெனமயக்கந் — தலைக்கேற்றம்
ஓவியமேனியினுக்கும் — பொய்த்தோற்றம்
உள்ளே திருப்பிப்பார்த்தால் — புழுநாற்றம்(பெண்)

3, கட்டிகட்டியாகக்கண் — பீளைசாரும்
காதிற்குறும்பிசளி — எச்சில்சேரும்
கொட்டும்வியர்வை — தலைப்பேனும்சேரும்
கும்பிநாற்றமாங் — குளித்திட்டநேரம்(பெண்)

4. மண்ணில்எலும்புதோல் — அல்லவோமாது
வற்றதெல்லாஞ்செட்டி — தட்டார்செய்சூது
பெண்ணில்லாவிட்டால் — பிழைப்பவர்க்கேது
பெண்ஜெபமும் — அவர்போனால்செல்லாது(பெண்)

5. மண்ணிற்பரஸ்திரீயைச் — சேரும்நிமித்தம்
வாழ்வுஞ்சுகமுந்தனமும் — அனர்த்தம்
எண்ணில்லாத்துன்பமும் — புண்களும்சித்தம்
ஈளரும்புக்குமகோற்சவம் — நித்தம்(பெண்)

6. இராவிற்கூத்தாடிகள் — வேஷமெடுப்பார்
இருட்டில்எவருமயங்கிக் — கொடுப்பார்
தரையில்மின்னார்பகல் — வேஷம்தொடுத்தார்
ஜாலவித்தைசெய்துலைதக் — கொடுப்பார்(பெண்)

7. உண்டால்விஷம்வெட்டினாற் — கொல்லுங்கத்தி
உன்னினோர்கண்டோரைக் — கொல்லும்பெண்சத்தி
அண்டாமல்ஆடவர் — ஓடுதல்புத்தி
அமர்வேதநாயகன் — சொற்கேட்டால்சித்தி(பெண்)

---

## உய்யும் வழி.

### 168-இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

உய்யும்வகையிஅறிநெஞ்சே-வேறு
செய்யும்உபாயங்கள்வஞ்சமே (உய்யும்)

அநுபல்லவி.

மையல்தரும்மும்மலங்களைநீக்கு
ஐயன்பொற்பாதத்துக்குன்னை ஆளாக்கு (உய்யும்)

சரணங்கள்.

1. நிந்தைபலத்த மூவாசையே-நானு
நிக்கிரகஞ்செய் அப்பசாசையே
எந்தவிதத்திலு மாசையே—ஒழித்
தென்றென்றுஞ்செய் தெய்வப்பூசையே (உய்யும்)

2. நானெனதென் றபிமானமே-மிக
நாட்டுவது மதியீனமே
என் உனக்கிந்த அஞ்ஞானமே—நீதான்
என்றுஞ்செய்வாய் ஜெபத்தியானமே (உய்யும்)

3. பெண்சேய் பண்டபதார்த்தமே-பெரும்
பீடையாம் அந்தச்சங்காத்தமே
கொண்ட அறந்தான்யதார்த்தமே- இதைக்
கூடில்உண்டாம் பரமார்த்தமே (உய்யும்)

4. மையல்பிருந்து கெடாதே-புவி
வாழ்வென்பது வெறுஞ்சூதே
நையுமெய்யன்பு விடாதே-வேத
நாயகனை நிதம்வோதே (உய்யும்)

---

169-இராகம்-தந்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

வழியிது உய்வதற்காமோ-பல
மாய்கையுந்தனை விட்டுப்போமோ-நெஞ்சே (வழி)

அநுபல்லவி.

அழுந்திடும்மலம்-யாவையுந்தள்ளு
அருள்பெறும்வகைக்காய்-அநுதினந்துதிகொள்ளு (வழி)

சரணங்கள்.

1. வீண்சப்பிரதாயங்களை-வெறுப்பாயே
நான்எனும் அபிமானம் நாடிமறுப்பாயே (வழி)

2. வையகவாழ்வு-பொல்லாதே
தையலுடன் தனமும்-சற்றும்மில்லாதே (வழி)

3. மாயையில் பலைத்துநீ திரியாதே
தூயநெறியகற்றில் தூய்மைவறியாதே (வழி)

4. செய்யும்தருமமில்லை-யாருமல்லாது
பொய்நிறைவாழ்வின்-பூரிப்போமில்லாது (வழி)

5. பாதகந்தொலைந்திட-பாணடிதேடும்
வேதநாயகன்சொல்லை-விரும்பிகொண்டாடு (வழி)

## நெஞ்சொடு பிணங்கல்.

### 170-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

அநுதினம்இந்தப்படி-உனனுடன்போர்கொடுக்க
யாராலாகும்நெஞ்சே (அநுதி)

அநுபல்லவி.

கனபக்தரொடுநள்ளாய்-காமானுபந்தந்தள்ளாய்
தினமும்என்னுரைகொள்ளாய்-சீச்சீ-இதென்னபிள்ளாய் ()

சரணங்கள்.

1. அனந்தமுறைநான்சொல்லக் கேளாய்
அகந்தை அழியாதோ
தினந்தினமும் நீபுந்திகெந்துற்
செய்கைகள்ஒழியோ நீ
நினைந்ததே திடமா உன்னால்
நிதமுஞ் சங்கடமா
சினந்தகவலைக்கு நீஇருப்பிடமா
செய்வதெல்லாம் ஹடமா (அநுதி)

2. படித்ததனிவேதந்தான் சொல்லிய
படிநீநடவாயோ
கடித்தவிஷம் ஒப்பாகியவினையின்
கடலைக்கடவாயோ நீ
பிடித்ததேபிடியா-ஆசைப்
பேயுன்னிடங்குடியா
எடுத்தமாயைக்கு நீமிதியடியா
உன்தொழில் இப்படியா (அநுதி)

3. கடந்தமேலோர்பகர்ந்தமொழியைக்
கனவிலுமதியாயோ
கடந்தபொய்யாகிவழிநீக்கி
நல்லவழிமிதியாயோ-நாம்
அடைந்தஉடல்சதமா-புவிவாழ்
வானதுசாசுவதமா
தொடர்ந்துவேதநாயகன் ஹிதமாய்ச்
சொல்லியுமே மதமா அநதி

## துர்க்குணம்போன்ற நற்குணங்கள்.

171-இராகம்-தன்னியாசி- ஆதிதாளம்.

பல்லவி.

செய்யவேண்டுமோனல்-நீ அநுதினம்
செய்-செய்-செய்-மனமே

அநுபல்லவி.

ஐயோவெறுத்தாய் நற்செய்கைகளையே
ஆசையிற்பின்சொலுந் துர்ச்செய்கைகளையே செய்ய

சரணங்கள்.

1. எதிர்உதவிகருதி — ஈயாலோபம்
ஈனர்கள்காற்றடிக்கினும் — அதில்சோபம்
வதிநீவினைமேல் — தீராக்கோபம்
வருவதுவாட்டும் — இப்படிப்பாபம் செய்ய

2. பரன் அடிமீதில் — அடங்காமோகம்
பலதெய்வங்களைப் — பணியாத துரோகம்
இரவும்பகலும் — புண்ணியந்தன்னில்இராகம்
இப்படியேதான் — பாபம்அநேகம் செய்ய

3. பலருக்கும்உதவிசெய்வதில் — பலவந்தம்
பரஸ்திரீக்கிடம் — ஈயாதகிர்ப்பந்தம்
தலமிசைபிறர்க்கிடா — செய்வதில்மந்தம்
தளராதிவ்வகை — தோஷம்அனந்தம் செய்ய

4. பொய்கொலைகளவுகள் செயஅறியாமை
புனிதர்போய்நாம் இலையென்னப்பொறுமை
மெய்விலகிய அவதூறுதாராமை
மெனமேல் இப்படியேபலதீமை செய்ய

5. நறகுணத்துர்க்குணம் எனச்சொலும்அசத்தியம்
தன்காரியம்பேணுத அபத்தியம்
நற்கதிபெறுவதில் ஒழியாப்பைத்தியம்
நாணிலத்திவ்விதமான துஷ்க்கிருத்தியம் செய்ய

6. நன்மைகள் துன்மைகள் காமக்குரோதம்
நாளும் அச்செய்கையிலே பிடிவாதம்
தன்மமிமித்தம் சாவலோகவிரோதம்
தளராதிவ்வாறே அபராதம் செய்ய

7. ஆட்கொள்வேதநாயகன் பாதமுத்தாரம்
அணியெனஉனக்குரைத்தேன் சவிஸ்தாரம்
கேட்கிலைஆதலிற் கொடுத்தேன்உத்தாரம்
கெட்டசெய்கைகள் உனதிஷ்டப்பிரகாரம் செய்ய

---

## மனவஞ்சகத்தைப்பற்றி.

---

### 172-இராகம்-பர்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

புரட்டெல்லாம்எங்கே-படித்துக்கொண்டனை
புகலுவாய்மனமே-இந்தப் புரட்

அநுபல்லவி.

முரட்டுமார்க்கம் சென்றிழைகிறாய்-அணு
முனையின்உள்ளும் நீ நுழைகிறாய்-இந்தப் புரட்

சரணங்கள்.

1. பொருளைத்தந்தவன் அருளைமறந்து
பொருளுக்கேஉபசாரம்-செய்யும்
மருளாபோல்அற்பப் பொருளைவிரும்பி
வானபரன்உபகாரம்-தன்னை

மறந்தாய் என்னைத் துறந்தாய் பொன்னைச்
சிறந்தாய் பின்னைப் பறந்தாய் பாரில்
உருளில்லாமல்தேரோட்டுகிறாய் பாரில்-பானு
உதயம்இரவிற்காட்டுகிறாய்-கன
இருள்கொள்பாசத்தில்மாட்டுகிறாய்-நாளும்
என்னைப்பம்பரம்ஆட்டுகிறாய்-இந்தப் புரட்

2. மண்டலந்தனில்கண்ட பொருளெலாம்
வண்மையென்றுநீகுறித்தாய்-பிர
சண்டஆசைக்கள் உண்டதாலேநீ
தலைமயங்கியேவெறித்தாய்-தனத்
தாசி எனம் பேசி வினை
பூசினையே சீசீ பார
அண்டங்களைக்கை அடக்குகிறாய்-கால்போல்
ஆழ்கடல்மீதும்நடக்குகிறாய் புண்யம்
என்றால்ஏழாமற்கிடக்குகிறாய் இந்தப் புரட்

3. என்னசொல்லினும் உன்னல்செய்யாயுனக்
கேனிந்தத்தலையாட்டை மாளும்
முன்னமேஐயோ பின்னஞ்செய்கிலை
மூளுந்தீவினைத்திரட்டை இது
மோசம் எய்தும் நாசம் லவ
நேசம் விசு வாசம் இன்றி
அன்னம்போலெங்கணும்பறக்கிறாய் கல்லின்
ஆவிடத்தும் பால்கலக்கிறாய் சுக
நன்னலர்தனைத்துலக்கிறாய் வேத
நாயகன்சொல்லைமறக்கிறாய் இந்தப் புரட்



## மனமயக்கம்.

### 173-இராகம்-வசந்தா-ஆதிதாளம்.

பல்லவி.

மயங்கிறாய்மனமே ஐயோவீரனே மயங்

அநுபல்லவி.

மயங்குகிறாய்மனமே வாழ்வுசொப்பனமே
மாறாமல்தினமே ஐயோவீணே — மயங்

சரணங்கள்.

1. ஏகனைமோக்ஷத் தியாகனைக்கருணைப்பிர
வாகனைப்பணியாமல் ஐயோவீணே — மயங்

2. எண்ணியபெரியோர் நண்ணியபொருளாம்
புண்ணியம்புரியாமல் ஐயோவீணே — மயங்

3. நேயம்உள்ளோர்கள் தாயகன்வேத
நாயகனைத்தொழாமல் ஐயோவீணே — மயங்

---

174-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநீ மயங்குவதேனோ தினம்
மருந்துக்காகிலும்நல் வழியில்லாதேனோ ஐயோ

அநுபல்லவி.

அநுதினம்செய்வது அகந்தையேராளம்
அகற்றிடசொன்னாலேவரு ஹீனமூலம் ஐயோ — மன

சரணங்கள்.

1. நிலையில்லாவாழ்வினை நிசயாய்நம்பினையே
தொலையாவிசாரத்தில் துவண்டுவெம்பினையே ஐயோ — மன

2. கவலையேகுடிகொண்டு காலங்கழித்திட்டாயே
அவனியிலுனைப்போன்ற அன்பருண்டோசொல்வாயே — ஐயோ

3. சித்தம்துன்பத்தினாலே நீயலைந்தாயே ஐயோ
அத்தன்பதம்வேண்டாமல் அலைந்தனையிதுபொய்யோ ஐயோ

4. கருணையென்பதில்லாமல் காரணத்தைக்கெடுத்தாய்
அருணெறியுணராமல் அகந்தையில்படுத்தாய் ஐயோ — மன

5. விஞ்சையதைவெறுத்து வீணிலேமலைத்தாய்
அஞ்சலெனவந்தோரை ஆதரியாதொலைத்தாய் ஐயோ — மன

6. போதநாயகனைநீ புகழ்ந்திடாதிருந்தாய்
வேதநாயகனுனை விரும்பில்நீபிறந்தாய் ஐயோ — மனமே

---

## கால தூஷணை.

### 175-இராகம்-தர்பார்-ஆதிதாளம்.

பல்லவி.

ஓகோகாலமே-உன்போல்ஏவர்க்-குண்டிந்திரஜாலமே (ஓகோ)

அநுபல்லவி.

போகமாகவே அண்டம்பூவெல்லாமேய்வாய்
பூனைபோலிருந் தீபுலியைப்போற்பாய்வாய் (ஓகோ)

சரணங்கள்.

1. ஊரெல்லாந்தூங்கினும் உனக்கில்லைதூக்கம்
ஓயாமல்ஓடுவா யுனக்குண்டோதேக்கம்
ஆர்கெட்டால்உனக்கென்ன அறியாய்நீநோக்கம்
அதிகவட்டிகள்கொடு பவர்க்குன்மேல்ஏக்கம் (ஓகோ)

2. பாலரைக்கிழவராய் பண்ணியேகொடுப்பாய்
பகைமதன்ஜெபம்கெட வாமலேதடுப்பாய்
காலிரண்டுடையார்க்குக் கோலொன்றுகொடுப்பாய்
காலனுக்குயிரெல்லாங் காட்டியேவிடுப்பாய்(ஓகோ)

3. ஆயுதமில்லாமல் யாவையும்அறுப்பாய்
அழுதாலுந்தொழுதாலும் அகன்றெம்மைவெறுப்பாய்
சாயுந்திராசுபோல சகலமும்நிறுப்பாய்
சகலஉயிரையுஞ்சட்டி யிலிட்டுவறுப்பாய்(ஓகோ)

4. கலலைப்போல்உடம்பையும் வில்லைப்போல்வளைப்பாய்
கணந்தினம்மதிவாரம் ஆண்டெனக்கிளைப்பாய்
வில்லைப்போல்வதனத்தைச் செல்லைப்போல்துளைப்பாய்
விங்கமுகியர்க்குத் தேவாங்குருவிளைப்பாய்(ஓகோ)

5. துக்கம்உற்றவர்க்குநீ தொலையாமற்கிடப்பாய்
சுகமுள்ளபோக்குநீ துரிதமாய்நடப்பாய்
விக்கலும்இருமலும் வேதையுங்கொடுப்பாய்
மிஞ்சுங்கருமயிரைப் பஞ்சுபோற்கொடுப்பாய்(ஓகோ)

6. மலைகள்பண்டங்களை வலிமையாஇடிப்பாய்
வாரிஎழுகடலும் வற்றிடக்குடிப்பாய்
தலைதடுமாறநீதாள் தொள்ளைஅடிப்பாய்
தனிவேதநாயகன் தயையாலேநடிப்பாய்(ஓகோ)

## உத்தியோக சம்பந்தக் கீர்த்தனைகள்.

## நியாயபரிபாலனஞ்செய்ய வரவேண்டல்.

---

### 176 இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

நானே பொதுநீதி தானேசெலுத்திட
நல்லவரம் அருள்கோனே (நானே)

அநுபல்லவி.

தானேயாகிய சாக்ஷாத்காரமே
தேனேஅமுதமே திவ்யஞானசாரமே (நானே)

சரணங்கள்.

1. வட்டஉலகில்யாரும் பொதுவில்அநுபவிக்கும்
மழைகால்வெயில்பூதாதிபோலவே
இஷ்டர்அநிஷ்டர்தமர் எளியர்செல்வர்பெண்புமான்
என்னும்பேதம் உன்னாமல் ஏலவே
திட்டமாச்சரிநீதி செலுத்தலின்மனம்நாட்டிச்
சிறியவழக்கும்பெரு வழக்கெனத்திண்ணம்நீட்டி
சட்டசாஸ்திரங்கள்மிக உதார்த்தறிவினைத்தீட்டி
சகலஉயிர்களும்என் தன்னுயிர்போல்பாராட்டி
சிட்டபரிபாலன னெனுமுடிசூட்டித்
தீயரமொழிபுகாமற் செவிவழிபூட்டிக்
கொட்டஞ்செய்துட்டர கண்ணில்விரலைவிட்டாட்டிக்
கூகூஎனப்போய் கதறும்படிமாட்டி (நானே)

2. அருணன்சந்திரனிலை நீங்கினுந்தரைமேல்கீழ்
ஆயினும்அறத்தைநான் விட்டாமல்
வருணன்போற்பொருள்மாரி வழக்காபெய்யினும்அதை
வாங்கயரசகன்போற்கைநீட்டாமல்
வரும்வழைக்காமனத்தை வன்சொற்களாற்சுடாமல்
மற்றைக்கீழ்உத்தியோகஸ்தர் வம்புக்கிடங்கொடாமல்
அருமடியால் வழக்காராய்ச்சியில்பின்னிடாமல்
அப்பன்பாட்டன்சொன்னாலும் அறநெறிகைவிடாமல்

தருமதேவதைஞாய ஸ்தலந்தனில்நடிக்கத்
தப்புச்சாக்ஷிகள் ஒடுகிடெனவே துடிக்க
இருமையகல்அநீதியேஓட்டம்பிடிக்க
இலஞ்சம்வாங்கிகள் வெட்கத்தால்உயிர்மடிக்க (நானே)

3. அந்தவிலங்குமுடன் கூன்குருடூமைமூக
லானஜென்மம்வராமல் தடுத்தாயே
முந்தமானிடஜென்மந் தந்ததுமன்றிப்பின்னும்
முன்சீபதிகாரமுங் கொடுத்தாயே
இந்தஉபகாரத்தை இதயத்தெழுதித்தேக்கி
எவர்க்கும்பெரியவனா னெனும் அகங்காரம்நீக்கி
நந்தாவிளக்கப்போல் நவையிருளினைப்போக்கி
நான்செய்தநீதிநூற்கென்நடையைத்திட்டாந்தமாக்கித்
தொந்தமெனவேவினை யாடிஉண்டுதாங்கிச்
சுகஉடலம்வளர்க்குஞ் சோம்பினைநீங்கி
விந்தைநன்முயற்சியில் மேன்மேல்ஓங்கி
வேதநாயகன்நல்லோன் எனஇசைதாங்கி (நானே)

---

## துர்வழக்காளிகளைப்பற்றி.

---

### 177-இராகம்சௌராஷ்டிரம்-அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தவழக்குக்கெல்லாம்நாம்தானா கோட்டில்
இந்தவனைஎல்லாம்நமக்கெஜமானா (இந்த)

அநுபல்லவி.

நந்தன்தன்வலியச்சண்டைபிடித்தானும் அந்த
நாதனைத்திட்டி அவன் அடித்தானா

சரணங்கள்.

1. தந்தைதுர்மார்க்கஞ்செய்துகெட்டானும் பிள்ளை
தாரங்களைத்தெருவில்விட்டானும்
முந்தஅதிகக்கடன் பட்டானும்நிலம்
முழுதுந்துர்விநியோகம்இட்டானும் (இந்த)

2. அண்ணன் தன் தம்பிகளை வெறுத்தானும் அவர்க்
காஸ்திபாகங்கொடாமல் மறுத்தானும்
கண்ணன்வயலைப்பொன்னன் அறுத்தானும் கடைக்
காதன்கெட்டசரக்கை நிறுத்தானும் (இந்த)

3. கன்னப்பூ வந்திமகன் கொய்தானும் அதைக்
கண்குருடன் அம்பால் எய்தானும்
ஜெகமிலைசனுமையானும் வைதானும் அதைச்
செவிடன்கேட்டுநகை செய்தானும் (இந்த)

4. தூங்கன்வாரியைக்கண்டு சிரித்தானும் சிங்கன்
தும்மிஇருமிவெட்டி முரித்தானும்
தங்கள்இரண்டுகையும் விரித்தானும் அந்தச்
சாந்தனுந்தன்முகத்தைச் சிரித்தானும் (இந்த)

5. கரமிலான்வாரியைப்பிடித்தானும் இரு
காலிலான்உதைத்தனைத் திடித்தானும்
சிரமில்லாதவன்கடித் தடித்தானும் பதம்
தினம்வேதநாயகன் படித்தானும் (இந்த)

-(*)-

## உத்தியோகசங்கடம்.

178-இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி.

அப்பாஇதென்ன அதிகாரம் ஐயோ
எப்போதுபக்திசெய்ய இல்லையேநேரம் (அப்பா)

அநுபல்லவி.

சுப்பையரோஅபத்தமூட்டை அந்தச்
சுந்தரையாவழக்கிலே தொள்ளாயிரம் ஓட்டை
அப்பையாகற்பிப்பார் பொய்ச்சீட்டை அந்த
அந்தையாகட்டுவார் ஆகாசக்கோட்டை (அப்பா)

சரணங்கள்.

1. சிலர்கேட்பார் கற்பகச்சோலை வேறு
சிலர்கேட்பார்நமன் அணுகாமலேஒலை
பலர்கேட்பார் நூறுபுலிப்பாலை அல்லும்
பகலும்உலகில் நமக்கிதுதானுவேலை (அப்பா)

